தல வரலாறு






# ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம்

## பட்டமங்கலம்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பட்டமங்கலம் ஸ்ரீ அட்டமாசித்தி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில் வரலாறு



தொகுப்பு

**பல்லவராயன்**

**ராஜாமணி குமரேசன் எம்.காம்; பி.எட்.,**

பட்டமங்கலம்

பதிப்பாளர்

**திருக்கோயில் அறங்காவலர் சிவநெறிச்செல்வர்**

**திரு. அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்கள்**

வெளியீடு

**பட்டமங்கலம் ஸ்ரீ அட்டமாசித்தி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில்**

மூன்றாவது பதிப்பு - 1991 பிரதிகள் 1500

ஆலய நிர்வாகிகள்:
திரு. அ.வீர. அடைக்கப்ப செட்டியார்
திரு. அ.வீர.ராம. வீரப்ப செட்டியார்

---

இப்புத்தகம் கிடைக்குமிடம் :

ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம்
பட்டமங்கலம் - P.O
திருப்பத்தூர் வட்டம்,
பசும்பொன் தேவர் திருமகனார் மாவட்டம்

---

# உள்ளடக்கம்





# ஸ்ரீ ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகள் அருளுரை
# (ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்)

அடைக்கப்பன்
சென்னை-87

தங்கள் கடிதம் கிடைத்தது. கடிதம் கண்டு ஸ்ரீ பெரியவர்கள் அனுக்ரகித்த ஸ்ரீமுகம் இத்துடன் அனுப்பிவைக்கப்பட்டுள்ளது.

இது விவரம் தெரிவிக்கலான காரியம்.

மானேஜர்

தலம் - தீர்த்தம் - மூர்த்தி மூன்றினாலும் பெருமை பெற்று புராணங்காட்டும் பழமை பெற்றுத் திகழும் பாண்டிய நாட்டுப்பட்டமங்கலக் கோயில் வரலாறு கண்டு மகிழ்கிறோம்.

அண்மைக்காலத்தில் கூட நமது மூதாதையர்கள் எவ்வளவு பொதுநல மனமுடையவர்களாகத் திகழ்ந்தார்கள் என்று விளக்கிக் காட்டும் முதற்பதிப்பைவிட வெளிவரவிருக்கும் மூன்றாவது பதிப்பு மக்களின் மனத்தைப் பொதுநலத்தில் நாட்டம் கொள்ளச் செய்வதுடன் ஊரின் வளத்துக்குக் கோயில் பராமரிப்பு ஆதாரமாகும் என்ற உண்மையைப் பதியவைப்பதிலும் வெற்றிபெறப் பட்டமங்கலம் சொக்கநாதன் அருள் சொரீவானாக.

நாராயணஸ்ம்ருதீ.

★ ★ ★

உ

# ஸ்ரீ ஸ்ரீ ஆச்சாரிய சுவாமிகள் அருளுரை

## (சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடம்)

To

The Managing Trustee,
Remy Charitable Trust
1, Arcot Rd., Alwar Thirunagar
Madras 600 087.

ஐயா,

தங்கள் 24-7-87 கடிதமும், ''பட்டமங்கலம் கோயில் வரலாறு'' என்று 1970ல் வெளியிடப்பட்ட அச்சிட்ட ப்ரதியும், மூன்றாவது ப்ரதியின் நகலும் கிடைக்கப்பெற்று ஸ்ரீ ஸ்ரீ ஸந்நிதானம் பாதகமலங்களில் சமர்ப்பிக்கப்பட்டது.

தாங்கள் உத்தேசித்துள்ள மூன்றாவது பதிப்பு நல்லபடியாய் ப்ரசுரமாகி, ஆஸ்திகப்பெருமக்களனைவருக்கும் கிடைக்க ஸ்ரீ ஸ்ரீ ஸந்நிதானம் அருளிய ஸ்ரீ ஸ்ரீ சாரதா சந்திரமௌளீஸ்வர ப்ரஸாதம் இதனுடன் அனுப்பப்பட்டிருக்கிறது.

இப்படிக்கு,



## அருள் நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அருளிய அணிந்துரை

பட்டமங்கலம், - அருமையான பெயர்: வாழ்க்கைக்குக் கற்றறிவிலும் பட்டறிவே சாலச் சிறந்தது. வாழ்க்கைப் பயணத்தில் நாம் துயருறும் துன்பங்களைச் சந்தித்தாலும் அத்துன்பத்தின் படிப்பினை நன்றாகவே அமையும். ஒருவர் படும் துன்பங்களை மங்கலமாக்குதல் வேண்டும். இதுவே பட்டமங்கலத்தின் தத்துவம். துயருறுத்தும் துன்பங்களில் அவலப்பட்டு அழுந்தாமல், அறைகூவலாக ஏற்று வாழத் தலைப்பட்டால் சித்தியடையலாம்.

''பட்ட மங்கையிற் பாங்காய் இருந்தங்(கு)
அட்டமா சித்தி அருளிய அதுவும்''

என்று திருவாசகம் போற்றும் இத்திருத்தலம் அருள்நலம் சிறந்தது. இத்திருத்தலத்தை நாளும் தொண்டு செய்து ஏ.வி.ஆர்.ஏ. அவர்களின் குடும்பத்தினரால் மூர்த்தி, தலம், தீர்த்தம், தலமரம் ஆகியன முறையாகப் பேணப்பெற்று வருகின்றன. இத்திருத்தலத்தின் தலமரமாக விளங்கும் ஆலமரம் அடர்ந்து விரிந்து நிற்கிறது. அகனமர்ந்த சிந்தனைக்குத் துணைசெய்கிறது. இந்தச் சூழல் எண்ணிய எண்ணியாங்கு அடைதற்குரிய நோன்பு இயற்றுதலுக்கு மிகவும் ஏற்றது. கல்லும் உருவநலம் பெற்றதாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். சித்திபெறுதல் என்பது சிந்தனைத் திறன் முழுமையாகப் பெறுதல் என்பதுதான்! சிந்தனைத் திறனுக்குரிய வழிபடு கடவுள் ஆலமர் செல்வன். இத்திருத்தலத்தில் ஆலமர் செல்வன் சந்நிதி தனியே அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

இத்திருத்தலத்திற்கு ஒரு அருமையான வரலாற்றை எழுதிய திரு.ரா. குமரேசன் எம்.காம்., பி.எட்., அவர்களுக்கு பாராட்டுக்கள்!

இத்திருத்தலத்தை இமைப்பொழுதும் சோராமல், திருத்தொண்டெனக் கருதிப் பேணிக் காத்து வரும் செம்மனச் செம்மல்கள் எனப் போற்றத்தக்க ஏ.வி.ஆர்.ஏ. குடும்பத்தினருக்கு நன்றி! பாராட்டுக்கள்! வாழ்த்துக்கள்! இக்குடும்பத்தினர் அம்மையப்பன் திருவருளால் இன்புற்று நலன்கள் அனைத்தும் பெற்று வளர்க! வாழ்க!

என்றும் வேண்டும் இன்ப அன்பு

திரு.அ.வீர.அடைக்கப்பன் அவர்கள்
அறங்காவலர், சிவன்கோயில், பட்டமங்கலம்.

# ஸ்ரீ குரு பாதுகா பஞ்சகம்

ஜகஜ்ஜ நிஸ்தேம - லயாலயாப்யாம்
அகண்ய - புண்யோதய - பாவிதாப்யாம்
த்ரயிசிரோஜாத - நிவேதி தாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குரு பாதுகாப்யாம்.

ஸகல உலகங்களின் உற்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றுக்கு காரணங்களாயும் எல்லையில்லாத புண்ணிய பரிபாகத்தின் மகிமையினால் அடையக் கூடியனவாயும் வேதங்களின் சிரோ பூதமான உபநிஷத்துக்களால் மட்டும் அறியக் கூடியனவாயும் உள்ளஸத் குருக்களுடைய பாதுகைகளை பலதடவைவணங்குவோமாக.

விபத்த மஸ்தோம - விகர்த்த நாப்யாம்
விசிஷ்ட - ஸம்பத்தி - விவர்த்த நாப்யாம்
நம்ஜ்ஜ நாசேஷ விசேஷ தாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குரு பாதுகாப்யாம்.

ஆபத்துக்களாகிய இருளைப் போக்கிற சூரியனாகவும், உயர்ந்த ஐஸ்வர்யங்களை மேலும் விருத்திசெய்யக் கூடியதுமாயும். வணங்குகிறவர்களுக்கு ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்க கூடியவையுமான ஸ்ரீமத் ஆச்சாரிய பாதுகைகளை வணங்குவோமாக

ஸமஸ்த - துஸ்தர்க்க - கலங்க - பங்கா -
பநோதந - ப்ரௌட - ஜலாச - யாப்யாம்
நிராச்ரயாப்யாம் - நிகிலாச்ரயாப்யாம்
நமோ நம: ஸ்ரீ குரு பாதுகாப்யாம்

பலவாறன துஷ்ட ஹேதுக்களால் கற்பிக்கப்பட்ட தோஷங்களாகிய சேற்றைப் போக்கடிப்பதில்பெரிய ஜலப்பெருக்காயும், மற்றொன்றைத் தாம் ஆச்ரியக்காமலும் மற்றவர்களாலே ஆச்ரயிக்கப் பெறுவனவாயும் இருக்கிற ஸ்ரீமத் ஆச்சார்ய பாதுகைகளை வணங்குவோமாக.

தாபத்ர யாதித்ய - கராத்தியா நாம்

சாயாமயீப்யாம் - அதி சீதலாப்யாம்

ஆபத்த - ஸம்ரக்ஷண - தீஹிதாப்யாம்

நமோ நம : ஸ்ரீ குரு பாதுகாப்யாம்.

தாபத்ரயங்களாகிற கொடிய சூர்ய கிரணங்களால் தகிக்கப்படுகிறஸர்வ ஜீவராசிகளுக்கும் குளிர்ந்த நிழலைக் கொடுப்பவையாயும், சரணடைந்தவர்களை காப்பதில் முக்கிய நோக்கமுள்ளதாயும் கூடிய ஸ்ரீ குரு பாதுகைகளை வணங்குவோமாக.

யதோ கிரோப் ராப்ய தியா ஸமஸ்தா
ஹ்ரியா நிவ்ருத்தா : ஸமமேவ நித்யா:
தாப்யாம ஜே சாச்யுத - பாவிதாப்யாம்
நமோ நம : ஸ்ரீகுரு பாதுகாப்யாம்.

ஸகல வேத ராசிகளும் தம்முடைய புத்தி யுத்திகளோடு கூடி எந்தப் பாதுகைகளின் மகிமையை வர்ணிக்க ஆரம்பித்தும் இயலாமல் இலஜ்ஜையோடு திரும்புகின்றனவோ இத்தகையவையும், பிரம்மா, விஷ்ணு த்ராதிகளால் எப்பொழுதும் கொண்டாடப் பெற்றவையுமான ஸ்ரீமத் ஆச்சார்ய சரணாரவிந்தங்களை வணங்குவோமாக.

யே பாதுகா - பஞ்சக மாதரேண
படந்தி நித்யம் ப்ரயதா : ப்ரபாதே
தேஷாம் க்ருஹே நித்ய நிவாஸசீலா
ஸ்ரீதேசி கேந்ரஸ்ய கடாக்ஷ லக்ஷ்மீ:

(ஆதி சங்கரர் நர்மதா நதிக்கரையில் தம் ஆச்சார்யரான ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரின் பாதுகைகளை தரிசித்து துதித்த) இந்த ஆச்சார்ய சரண கமல பீடமான பாதுகைகளை துதிக்கும் ஐந்து ஸ்லோகங்களை ஆதராதிசயத்துடனும் பரிசுத்தமாயும் பிரதிதினம் காலையில் பாராயணம் செய்கிறார்களோ, அந்த மஹான்களுடைய கிருஹங்களில் ஸ்ரீ பரமாச்சாரியர்களுடைய கருணா விலாசலமும், லெக்ஷ்மீ கடாக்ஷமும் ஏற்படும், நிச்சியம்

உ சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# ஸ்ரீ கற்பக விநாயகர் கவசம்

காப்பு

1. பொன்னைச் சுகத்தைப் பொழியும் மழையாக்கி
என்னைப் பயிராக்கி இன்புதவும்-அன்னையெனத்
தாங்கித் தமிழளிக்கும்! தாமரையாம் கற்பகத்தின்
பூங்கருணை காப்பாம் புகல்.

2. வாழ வழிகாட்டி வாகை நெறிகாட்டும்
வேழ முகக்கடவுள் வீறுயரும் - தாளிணைகள்
எண்ணிக் கவசமென ஏத்தும் தமிழ்நோக்கி
நண்ணி வருவான் நயந்து.



உ சிவமயம்

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# கவசம் - நூல்

சீரும் சுகமும் சிறந்த மதியும்
ஊருக் குதவும் உயர்ந்த மனமும்
காராய் வழங்கும் கரமும் தரமும்
நேராய் வளர்ந்து நிறையும் திருவும்
பிணிகள் இல்லாப் பெருந்திரு வாழ்வும்
பணிவும் புகழும் கனிவும் நிறைவும்
மாரன் போலும் பேரழ(கு) உடலும்
சாரம் செறிந்த தமிழ்ச்சுவை நாவும்
தன்னைப் பணியும் சான்றோர்க் குதவும்
கண்ணின் மணியே! கற்பகப் பிள்ளாய்!
எண்ணித் தொழுதேன் இன்புற் றோதும்
வண்ணத் தமிழை வளர்செவி மடுத்துத்
தண்ணளி செய்யத் தாவி வருக!
திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்
எரிதழல் மேனிப் பிறைவளர் வேணி
உமையொரு பாகன் தவிழ்விழை ஈசன்
சுமைதவிர் துணையெனத் தருமுதல் மைந்தன்
மோதகம் ஏந்திடும் முழுமுதற் கடவுள்
சாதகம் செய்திடும் சங்கடம் கொய்திடும்
வேத முதல்வன் விரைந்துடன் வருக!
வேதம் காணுப் பாத மலரில்
காதல் நிறைந்த கவிதை வாணர்
பாடிப் படைக்கும் பாடல் சூடிக்
கோடிச் சுகங்கள் குவிக்க வருக!

## ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் துதி

எட்டெனும் பெரிய சித்திகள் எல்லாம்
இயக்கியர் கல்லுரு ஒழிந்து
தட்டறத் தெளிய ஞானசற் குருவாய்த்
தனிப் பெருங் கூடலின் நீங்கிப்
பட்டமங் கலமாம் தெய்வீகத் தலத்தில்
பண்புசால் கோயில் வீற் றிருக்கும்
மட்டிலாக் கருணை வள்ளலாம் சோம
சுந்தரன் மலரடி போற்றி!



உ
ஓம்
சிவமயம்

''புவனியிற் போய்ப்பிற வாமையில் நாள்நாம்
போக்குகின் றோம்அவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கி.......
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்ல ஆரமுதி னைப் பள்ளி எழுந்தருளச் செய்து அருள் செய்விப்பார் மணிவா சகப் பெருந்தகை.

உலகில் உயிர் அனைத்தும் பெருநிலை அடையத் துடிக் கின்றன. கருப் பொருள் முதல் பருப்பொருள் ஈறாக, ஜடப் பொருள் முதல் சேதனப்பொருள் ஈறாக, தொடக்கம் முதல் துரியம் வரை பரிணாமத்தை அடைகின்றன, நாம் அடைய வேண்டிய முழுப் பரிணாமத்தையே நம் முன்னோர்கள்,

''முன்னைப் பழம் பொருட்க்கும் முன்னைப் பழம் பொருள்''
''பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெரும் பொருள்''
''அங்கு இங்கு எனாதபடி எங்கும் நிறைந்த பொருள்''
''தன்னிலே நின்று தழைக்கும் பொருள் - என்றெல்லாம் பேசினார்கள்.

முழுப் பரிணாம வளர்ச்சியான பெருநிலையை அடையச் சாத னமான வழியையும் வகுத்துத் தந்துள்ளனர். அருவமாகவும், உருவமாகவும், அருவுருவமாகவும், ஞானத்திலும், செயலி லும் அனுபவித்து அறிந்து நம்மிள் கடந்தும் உள்ளும் இருக்கும் அப்பொருளை ''கடவுள்'' என்றும் ''கந்துழி'' என்றும் பரவி நிறைந்த அப்பொருளை ''பரமன்'' என்றும் யாண்டும் நிறைந்து மங்களமாக இருக்கும் அப்பொருளை ''சிவம்'' என் றும், பசு, பாசம், பதி என்னும் தத்துவங்களை விளக்கி, அதற் குத் தேவையான பக்குவ நிலையை அடைய, பயிற்சிச் சாலை யாக ஆலயம் அல்லது திருக்கோயிலை அமைத்துத் தந்துள்ள னர்.

ஆலயம்;- ஆ - பசு, அதாவது ஆன்மா, லயம் - அடை யும் இடம்; ஆன்மா கடவுளை அடையும் இடம்.

திருக்கோயில்; திரு- தெய்வத்தன்மை நிறைந்த, கோ- கடவுள், இல்- இல்லம் ; தெய்வத் தன்மை பொருந்திய கடவுளின் இல்லம் இவ்வாறு பொருள் படுகின்றன.

''கோயில் இல்லா ஊரில் குடியிருக்கவேண்டாம்'' என்கிறது. அவ்வைத் தமிழ். கோயில்கள் அருளியல் வழியிலும் பொருளியில் வழியிலும் மனிதனை மனிதத் தன்மையிலும் தெய்வத் தன்மையிலும் உயர்த்தும் சாதனமாக இருப்பது கருதியே அவ்வாறு கூறினர் தமிழ் சான்றோர்.

''திருக்கோயில் இல்லாத திருவில் ஊர்''——என்ற பழிப்பு நீங்க பட்டி தொட்டிகளிலும் கூட கோயில்கள் அமைத்து; பாரதம் முழுதும் கோயில்கள் அமைந்து உலகிற்கே பாரதநாடு திருக்கோயிலாக பரிணமிக்கிறது.

''திருக் கோயில்கள் கால அளவை கடந்து நிற்கின்றன

''ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ?
''ஒரு ருவே மூவுருவம் ஆன நாளோ?
''கருவனாய்க் காலனை முன் கடிந்த நாளோ?
காமனையும் கண் அழலால் காய்ந்த நாளோ?
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ?
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே!

என்று வியந்து பாடுகின்றார் 1300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த அப்பர் பெருமான். திருக்கோயில்களில் எழுந்த கட்டுமானப் பொருள்களைக் கொண்டு கோயில் எழுந்த காலத்தை கணக்கிடுவர் பொறியியலாளர். திருக்கோயிலாக அமையப் பெற்ற பெற்றியை எவ்வாறு கணக்கிடுதல் கூடும்?

மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய் தொடங்கினார்க்கு
வார்த்தை சொல்ல சற்குருவும் வாய்க்கும் பராபரமே!

- என்பார் தாயுமான சுவாமிகள்.

சற்குருவே மூர்த்தியாக எழுந்தருளிய திருக்கோயிலாக இருந்தால்! அதன் பெருமையை, அருமையை எவ்வாறு இயம்புவது அத்தகைய திருக்கோயிலின் வரலாற்றை அறிந்து வணங்கி உய்வோமாக.

—தொகுப்பாசிரியன்

## தலமும் இருப்பிடம்:

தற்போது பசும்பொன் தேவர் திருமகனார் மாவட்டம் என்று அழைக்கப்படும் செந்தமிழ் நாட்டு சிவகங்கை சீமை யில் திருப்பத்தூர் வட்டத்தில், கல்லல் ஊராட்சி ஒன்றியத்தில் மணிமுத்தாறு நதியின் வளம் சுரக்கும் பகுதியின் நதிக்கரையில் அமைந்துள்ளது பட்டமங்கலம் என்னும் சிவத்தலம்.

இத்தலத்திற்கு வடக்கே தேவாரப்பாடல் பெற்ற திருப் பத்தூர் என்ற சிவத் தலமும் சுயம்பு கரும்பீசர் திருக்கோயிலும் தென் கிழக்கே திருக்கானப் பேர் என்னும் காளையார் கோயில் என்ற சிவத்தலமும் சுயம்பு ஆண்டபிள்ளை நயினார் கோயி லும் வடமேற்கே திருக் கொடுங்குன்றம் என்னும் பிரான்மலை என்ற சிவத்தலமும் மேற்கே இத்தலத்தைச் சேர்ந்த திருக்கோட் டியூர் என்ற வைணவத் தலமும் சுயம்பு சரபேஸ்வரரும் அமைந்து விளங்குகின்றன.

''பட்டமங்கலம்'' என்று அழைக்கப்படும் இவ்வூர் இருப்புப்பாதை சந்திப்பான காரைக்குடி என்னும் நகரிலிருந்து மேற்கே 13 கல் தொலைவிலும் திருப்பத்தூரிலிருந்து தெற்கே 5கல் தொலைவிலும் திருக்கோட்டியூரிலிருந்து கிழக்கே 3 கல் தொலைவிலும் சிவகங்கையாகிய மாவட்ட தலைநகரிலிருந்து வடகிழக்கே 20 கல் தொலைவிலும் அமைந்துள்ளது.

மதுரையிலிருந்தும், திருச்சியிலிருந்தும் கல்லல் காரைக்குடியிலிருந்தும், இராமநாதபுரம், சிவகங்கையிலிருந் தும் இவ்வூருக்கு போக்குவரத்து வசதிகள் பேருந்து வழித்தடங் கள், வசதிகள் உள்ளன.

இப்பட்டமங்கலம் கல்லல் ஊராட்சி ஒன்றியத்தில் நிர் வாக வசதிக்காக பட்டமங்கலம் (கிழக்கு) பட்டமங்கலம் (மேற்கு) என்று பிரிக்கப்பட்டு இருந்தப்போதிலும் ஒரே ஊரான இப் பட்டமங்கலம் 5000 மக்கள் தொகை கொண்ட அழகிய ஊராகும்.

நீர்வளம், நிலவளம் பெற்ற இவ்வூர் வேளாண்மைத் தொழிலை வாழ்வுக்கு ஆதாரமாகக் கொண்டுள்ளது. நல்ல நகர அமைப்பும் காற்றோட்டமாயும் சுகாதாரமாகவும் கொண்டு விளங்குகின்றது.



ஸ்ரீமான் அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்கள்

## திருக்கோயில் அமைப்புப் படம்

### எண்ணிக்கைகளின் விபரம்

| | |
|---|---|
| 1. அத்திமரம் | 11. பஞ்சலோகத் தட்சிணாமூர்த்தி |
| 2. தெப்பக்குளம் (குடிநீர்) | 12. பூர்வலிங்கம்-அம்பாள் சந்நிதி |
| 3. அரசமரத்துப் பிள்ளையார் | 13. சித்திவிநாயகர் ஆலயம் |
| 4. அடைக்கலங்காத்தான் கோயில் | 14. கொட்டகை |
| 5. சுப்பிரமணியர் கோயில் | 15. காரியாலயம் |
| 6. தட்சிணாமூர்த்தி ஆலயம் | 16. அடைக்கப்பசுவாமிகள் சமாதி |
| 7. அட்டமாசித்தி ஆலமரம் | 17. பசுமடம் |
| 8. சண்டேசுவரர் ஆலயம் | 18. நந்தவனம் |
| 9. மூலஸ்தானம் | 19. சமயக்கருப்பன் கோயிலும், விருட்சமும் |
| 10. அம்மையார் சந்நிதி | 20. தச்சன் கோயில் |

இவ்வூரில் அரசினர் உயர் நிலைப்பள்ளியும், அஞ்சல் நிலையமும், மருத்துவ நிலையமும் கூட்டுறவு இயக்கங்களும் அமைந்து சிறக்கின்றன. இவ்வூரைச் சுற்றிலும் ஐயனார் பரிவார கிராமதேவதைகள் கோயில்கள் இருக்கின்றன. இவைகள் கிராமியப் பண்பாட்டை வளர்க்கின்றன. ஊரின் மேலரதவீதியில் நகரத்தார் மடமும் தண்டாயுதபாணி திருக்கோயிலும் உண்டு. இதில் ஆண்டுதோறும் மாசிக்கார்த்திகையில் மகேஸ்வரபூசை நகரத்தார்களால் விமரிசையாக நடத்தப்படுகிறது.

# திருத்தல பெருமை

## வரலாற்றுப் பெருமை:

ஒவ்வொரு தலமும் வரலாற்று வழியாகவும், வாழும்வழியாலும் பெருமை பெறுகின்றன. பட்டமங்கலம் இவ்விரு வழிகளிலும் பெருமை பெறுகின்றது என்பதில் ஐயமில்லை.

இராமநாதபுரம் சமஸ்தானத்திற்கு உட்பட்ட பண்பாட்டு நாடுகள் 72ல் ஒன்றாக இருக்கும் இப்பட்டமங்கலப் பகுதி சேது சமஸ்தானத்திலும் சிவகங்கை சமஸ்தானத்திலும் அரசியலிலும், பண்பாட்டு நெறியிலும் சிறந்து விளங்கியது. சமஸ்தான மன்னர்கள் பட்டமங்கலத்தை ''கண்''என போற்றி பாதுகாத்தனர்.

சிவகங்கை மன்னர்கள் இவ்வூர் பகுதியைச் சேர்ந்த கோயில்களுக்கு நிவந்தங்களும், மாணியங்களும் வேதியர்களுக்கு திரு நாராயண சதுர்வேதி மங்களம் உள்பட 10க்கும் மேற்பட்ட கிராமங்களை கிராம தானமும் செய்த வரலாற்றை சமஸ்தான ஆவணங்களில் காணலாம்.

மேலும் இவ்வூர் மக்கள் விவேகத்திலும் வீரத்திலும் சிறந்து விளங்கி மன்னர்களுக்கு உறுதுணையாக தென் பாண்டி சிங்கங்களாகத் திகழ்ந்தனர்.

## பண்பாட்டுப் பெருமை:

எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!

என்கிறது பழம் தமிழ்பாடல். எங்கு நல்லவர்கள் வாழுகின்ற னரோ அந்த இடங்கள் பெருமை மிக்க நல்ல தலங்களாகும். அப்படிப்பட்ட நல்ல தலங்கள் சிறந்து விளங்கும் என்பது இதன் பொருள்.

''காசின் வாய் கரம் விற்கிலும் கரவாது மாற்றிலி சோறிட்டு
தேசவார்த்தை படைக்கும் வண் கையினார்கள் வாழ்
திருக்கோட்டியூர்''——

என்று ஆழ்வார் மங்களாசாசனம் செய்கிறார்.

விருந்து புறத் தானுண்டு சாவா மருந்தெனினும்
வேண்டார் பற் றற்று''.

என்பார் திருவள்ளுவப் பெருந்தகை. சாவாமைக்குக் காரண மான அமிழ்தம் ஆயினும் தானே உண்ணாது விருந்தினருக்கும் உபசரித்துக் கொடுத்து உண்பது இவ்வூர் மக்கள் வழக்கம். இது மட்டோ! செவிக்கு உணவு இல்லாத போழ்தல்லவா வயிற் றுக்கு ஈயவேண்டும்.

தமக்குக் கிடைத்த அரிய ரகஸ்யமான திருமந்திரார்த் தத்தை திருக்கோட்டியூர் நம்பிகளிடமிருந்து பெற்று, கிடைப் பது நரகமே ஆயினும் உலக மக்களுக்கு உபதேசிப்பேன் என்று உயர்ந்த கோபுரத்தில் அமர்ந்து உலகோர்க்கு உபதேசம் செய்த எம்பெருமான் ராமானுசர் உலகப்பெருமை பெற்றதும் இப் பட்டமங்கலத்தைச் சேர்ந்த திருக்கோட்டியூர் அன்றோ.

## புராதன காலத்தில் பட்டமங்கல திருத்தலம்

புராதன காலத்தில் பட்டமங்கலம் சிறந்தோங்கி இருந் தது. இப்பட்டமங்கல திருக்கோயிலில் இருந்து மேற்கே அரைக்கல் தொலைவில் உள்ள பழூவூர் பதி என்னும் இடம் சிறந்த சிவத்தலமாக இருந்தது என்பதற்கு நிறைய ஆதாரங்கள் உண்டு. இப்பகுதியில் இன்றும் கிடக்கும் தெய்வப் படிமங்க ளான சதுரலிங்கம், நந்திகேஸ்வரர், சண்டேஸ்வர் முதலியவற் றிலிருந்தும், மட்பாண்டங்கள், கல்லால் செய்யப்பட்ட அணிக லன்கள் கல்வெட்டுகள் இப்பகுதி மக்களின் வாழ்க்கை முறை யினையும், பண்பாடு, நாகரிகத்தையும் பறை சாற்றுகின்றன.

மேலும் முதுமக்கள் தாழிகள், நீண்ட மனித எலும்பு பகுதிகள் இப்பகுதியின் தொன்மைக் காலத்தை உணர்த்துகின்

றன. இப்பகுதியில் காராளர்கள் வாழ்ந்து சிறந்திருக்கின்றனர் என்பதற்கு ஆதாரங்கள் மிக உண்டு.

இது போலவே பட்டமங்கலத் திருக்கோயிலின் வடக்கே அரைக்கல் தொலைவில் அமைந்துள்ளதும் நயினார் கோயில் என்று பெயர் வழங்குவதுமான அருள்மிகு கரும்பீசுவரர் என்ற சுயம்பு திருமேனியும், கோயிலும் குளமும் புராதன பண்பாட்டை விளக்குகின்றது.

## புராண காலத்தில் பட்டமங்கலத் திருத்தலம்

வரலாற்றாலும், தொண்மையாலும் சிறந்து விளங்கும் பட்டமங்கல திருத்தலம் கதம்பவன புராணம், திருவிளையாடற் புராணம், வடமொழி ஆலாசிய மாண்மியம் முதலான புராண காவியங்களாலும், சமயக் குறவர்களுள் ஒருவரும் அவர்களுள் முற்பட்ட காலத்தவருமான மாணிக்கவாசக சுவாமிகளாலும் புகழ்ந்து பேசப்படுவதைக் காண்போம்.

## கதம்பவன க்ஷேத்ரம்

''ஸுமேரு மத்ய சிருங்கஸ்த்தா ஸ்ரீமன் நகர நாயிகா
சிந்தாமணி கிருகாந்தஸ்த்தா பஞ்ச ப்ரமா ஸனஸ்த்திதா
மகா பத்மாடவி ஸம்த்திதா கதம்பவன வாசினி
ஸுதா ஸாகர மத்யஸ்த்தா காமாட்சி காமதாயினி''—
(லலிதா)

பராசக்தியான ஸ்ரீமாதா அருளாட்சி செய்யும் ஸ்தலங்களில் சிறப்பித்து வாக்குத் தேவதைகளால் சொல்லப்பட்டவைகள் மகாமேரு, ஸ்ரீமன் நகரம், சிந்தாமணி கிருகம், பஞ்ச பிரம்மாஸனம் ஆகிய தத்துவப் பெருநிலை, மகா பத்மம் என்ற யானைகள் நிறைந்த அடவியாகிய திருவானைக்கா, கதம்பவனம், ஸுதா ஸாகரமாகிய ஞானாமுத நிலை ஆகியனவாகும்.

பட்டமங்கல ஸ்தலம் கதம்பவன க்ஷேத்ரம் ஆகும். பட்டமங்கலம் முதல் மதுரை மாநகர் வரையிலான இப்பகுதி கதம்பவனம் என்று அழைக்கப்பட்டது. ஆலமரம், ஏர் அழிஞ்சி மரம், அரசமரம், நாவல் மரம், பூவரசன் மரம், புங்க மரம், உவா மரம் முதலான பல்வகை மரங்களும் வளர்ந்து செழிக்கும்.

பெரும் காடானபடியால் இது கதம்பவனம் என்று அழைக்கப் படுகிறது. மேலும் மதுரையம்பதியின் ஸ்தல விருட்சம் கடம்ப மரமாக இருப்பதால் சிறப்புக் கருதி இப்பகுதி கடம்பவனம் என்றும் அழைக்கப்படுகிறது. இந்த க்ஷேத்ர பதியான மதுரை மாநகரில் மந்திரிணி தேவியாக மகா சியாமள வடிவுடன் ஸ்ரீ மீனாம்பிகையாக அருளாட்சி செய்கின்றாள்.

## கதம்ப மகரிஷியின் ஆசிரமம்:

பெருமை மிக்க கதம்பவனத்தில் பட்டமங்கலத் திருத்தலத்தில் சிறந்த ஏர் அழிஞ்சி மரத்தடியில் பூத கணங்க ளின் காவலுடன் ஆசிரமம் அமைத்து முனிவர்கள் புடைசூழ கதம்ப முனி என்ற மகரிஷி தவம் செய்து வந்தார்.

இவ்வாறு வாழ்ந்து வரும் காலத்தில் தேவலோகத்தில் (சகல லோகத்தையும் ஆட்சி செய்து வந்த) ஹிரண்யாசூரன் தேவர்களை கொடுங்கோண்மை செய்து ஆண்டு வந்தான். ஒரு நாள் ஹிரண்யாசூரன் ஒரு பூதனைக் கொன்று தூக்கி எறிந்தான். எறியப்பட்ட அப்பூதனுடைய பிரேத உடல் கதம்ப மகரிஷியின் ஆச்சிரமத்தில் வந்து வீழ்ந்தது. இதுகண்ட கதம்ப மகரிஷி கடும் சினத்துடன் ஹிரண்யாசூரன் கதம்பவனப் பகுதிக்கு வர இய லாதபடி சாபமிட்டார்.

ஹிரண்யாசூரனின் கொடுங்கோண்மை மிகுந்து தேவர் கள் துன்பப்பட்டு அலைக்கழிந்தபோது ஹிரண்யாசூரனின் சாபத்தின் தன்மை அறிந்து தேவர்கள் அனைவரும் கதம்பவ னத்திற்கு வந்து கதம்ப மகரிஷியின் அடைக்கலமாக சேர்ந்தார் கள். பட்டமங்கல திருக்கோயிலின் மேற்கே 3 கல் தொலைவில் தேவரும் மூவரும் கூடி ஹிரண்யாசூரனின் அழிவுக்கு வழி வகுத்தார்கள். தேவர்கள் கோஷ்டி சேர்ந்த இடமாதலால் அது (திரு + கோட்டியூர்) திருக்கோஷ்டியூர் என்று அழைக்கப்படுகி றது. அங்கு பிரகலாதன் தோற்றமும், நரசிம்ம அவதாரமும் நிர்ணயிக்கப்பட்டது. கதம்ப மகரிஷியை அடைக்கலம் காத்த வர் என்ற பட்டம் கொடுத்து தேவர்கள் அவரை தெய்வமாக ஆண்டு கொண்டார்கள். அவரது ஆசிரமப்பகுதி அடைக்கலம் காத்த நாடு என வழங்கப்பட்டது.

திருக்கோஷ்டியூர் ஸ்ரீ மாதவன் திருக்கோயிலின் கருவ றையில் கதம்ப மகரிஷி எழுந்தருளிச் சிறப்பிப்பதையும் பட்ட

மங்கலத் திருத்தலத்தில் அவரது ஆசிரமம் தற்போது அடைக்க லம் காத்த அய்யனார் கோயிலாகவும் சிறந்து விளங்குகிறது. இவ்வூர் நாட்டுமக்கள் ஆண்டுதோறும் பூதம் எடுத்து வழிபாடு செய்வதை காணலாம்.

## திருவிளையாடற் புராணத்தில் தெய்வீக தலம் பட்டமங்கலம்

பாண்டி நாட்டு பழம்பதியில் சைவமும் தமிழும் தழைத்தோங்கியதும் சோம சுந்தரக்கடவுள் பாண்டிய மன்னரா கத் திகழ்ந்ததும், ஸ்ரீமாதா மலையத்துவஜ பாண்டியன் மகளாக அவதரித்ததும், சோமசுந்தரக் கடவுள் இறையனார் என்ற திருப் பெயருடன் சங்கப் புலவராக வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்ததும், திருமுருகப் பெருமான் உருத்திர சன்மர் மகனாக திரு அவதா ரம் செய்ததுமான மதுரையம்பதி சிவராஜதானி எனப் பெயர் பெறுகின்றது.

சோமசுந்தரக் கடவுளின் அறுபத்துநான்கு திருவிளை யாடல்களையும் திருவிளையாடல் புராணமும் ஆலாகிய மான்மியமும் பேசுகின்றன.

இறைவனின் அறுபத்தி நான்கு திருவிளையாடல்களில் முப்பத்து மூன்றாவது திருவிளையாடல் நடந்த ஸ்தலம் பட்ட மங்கலம் ஆகும். இது இறைவன் அட்டமா சித்திகள் அருளிய திருவிளையாடலாகும்.

## இயக்க மாதர் அறுவரின் வேண்டுகோள்:

முன்னொரு காலத்தில் திருக்கயிலாய மலையில் மதி நுதல் மங்கையோடு வடபாலிருந்து இறைவன் போக மூர்த்தி யாய் எழுந்தருளி திரு நந்திதேவர், பிருங்கி, சனகாதி நால்வர் முதலியோர்க்கு சிவ கதையினைத் திருவாய் மலர்ந்தருளிக் கொண்டிருந்தார்.

அச்சமயம் கார்த்திகை பெண்களான இயக்க மாதர் அறு வரும் சிவகோலத்துடன் இறைவன் திருமுன் வந்து திருவடித் தாமரையின் கீழ் வீழ்ந்து வணங்கி நின்று, ''எம்பெருமானே! எங்களுக்கு அட்டமா சித்தியை உபதேசித்தருளும்'' என்று

வேண்டினர். உமாதேவியாரும் கார்த்திகைப் பெண்களுக்காக அட்டமாசித்திகளை அருளும்படி பரிந்துரை செய்தார்கள்.

## இறைவன் கார்த்திகைப் பெண்களுக்கு அட்டமா சித்திகளை உபதேசித்தல்:

சிவபெருமான் கார்த்திகைப் பெண்களிடம், ''எம்மை அறிந்த சிவயோகிகள் இச்சித்திகளை விரும்ப மாட்டார்கள். ஆயினும் இச்சித்திகள் அவர்கள் உடம்பின் நிழல்போலத் தொடர்ந்து உலகினர்க்கு அவர்களின் பெருமைதனை உணர்த் தும்தகுதியையுடையனவாம்'' என்று அருளி உவகையுடன்தம் அருகு இருக்கும் உமாதேவியாரைச் சுட்டிக்காட்டி ''இவள் எங்கும் நிறைந்த பராசக்தி ஆவாள். அணிமா முதலான அட் டமா சித்திகள் இவளைப் பணிந்து குற்றேவல் புரியும். இவளை நீங்கள் பஞ்ச தசாச்சரி மந்திரத்தால் வழிபட்டால் உங்கள் தீவினை நீங்கப் பெற்று அட்டமாசித்தியினையும் அவள் தந்தருள்வாள்''—என்று திருவாய் மலர்ந்து கார்த்திகை பெண்களின் வேண்டுகோளுக்கு இணங்கவும், உமாதேவியா ரின் பரிந்துரைப்படியும் அட்டமாசித்திகளை அவ்வியக்க மாதர் அறுவருக்கும் உபதேசித்து அருளினார்.

## இயக்க மாதர் அறுவரும் சாபம் பெறுதல்:

இறைவனால் நேரில் உபதேசம் பெறும் வாய்ப்புப் பெற்ற நங்கையர் அறுவரும் தேவியை சிந்தனை செய்யாம லும், கவனக்குறைவாகவும் அட்டமா சித்திகளை செவிமடுக் காது போயினர். சிவபெருமான் அதனை உணர்ந்து அப்பெண் களைச் சினந்து, ''நீங்கள் பட்டமங்கை என்னும் தலத்திலுள்ள ஆலமரத்தடியில் கற்பாறையாகக் கிடக்கக் கடவீர்கள்'' என்று சபித்தருளினார். அப்பெண்கள் தங்கள் பிழையினை அறிந்து வருந்தி வணங்கி, ''எம்பெருமானே! இச்சாபம் எங்களுக்கு எப்போது நீங்கும்?'' என்று கேட்டனர். சிவபெருமான், ''நீங் கள் கருங்கற்பாறையாய் ஆலமர நிழலில் ஆயிரம் ஆண்டு கிட வுங்கள்; அதன் மேல் யாம் மதுரையினின்றும் வந்து குருவடி வில் காட்சியளித்து சாபம் போக்கி பழைய வடிவம் தந்து அட்டமாசித்திகளை அருளுவோம்'' என்று அருளிச்செய்தார்.

## இயக்க மாதர்கள் ஆலமரத்தடியில் பாறைகளாதல்:

பட்டமங்கலம் திருக்கோயிலின் தல விருட்சமாக விளங்கும் மிக பெரியதும் அனேக விழுதுகளுடன் யுகக் கணக்கான தொன்மையும் புனிதமும் வாய்ந்த ஆலமரத்தடியில் கார்த்திகைப் பெண்கள் கற்பாறைகளாகி கிடந்தார்கள். அவர்கள் ஆலமரத்தின் இலைகளாலும் சருகுகளாலும், ஆலம் பழத்தினாலும் உடல் முழுதும் மூடப்பட்டு ஆயிரம் ஆண்டுகள் கிடந்தனர்.

இவ்வால மரத்தினை, ''இட்டகோடி யோசனை போந்து விண்மிசை முட்டும் ஓர் வடதரு''—— என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் புகழ்ந்து கூறுகிறது.

திருவிளையாடற் புராணம், ''பட்ட மங்கைப் பழுமர முதல்''—— என்றும், திருவிளையாடற் போற்றிக் கலி வெண்பா, ''பட்டமங்கைப் பாறையுறு''——என்றும்

கடம்பவன புராணம், ''தென்னாட்டிற் பட்டமங்கலத் தாற் கீழ்வீழ்ந்து உரனுறுகல் லாகிக் கிடந்தீர்''—— என்றும் புகழ்ந்து பேசுகின்றன.

## உமா தேவியார் காளி வடிவம் அடைதல்:

இறைவன் கார்த்திகைப் பெண்களுக்கு அட்டமாசித்திகள் தேவையற்றவை என்று அருளியபோதும் உமாதேவியார் பரிந்துரை செய்தது கருதி பரிந்துரை செய்த குற்றத்திற்காக பட்டமங்கலத்தில் அழகிய நாவல் மரத்தடியில், ஆலமரத்தின் அன்மையில் கிழக்கே காளிவடிவு கொண்டு திருநந்தியெம் பெருமான் காவலுடன் ''நவ்வையடிக் காளி'' என்ற திருப்பெயர் தாங்கி நெடுங்காலம் தவமியற்றிக் கொண்டிருந்தார்.

## இயக்க மாதர்களுக்கு பட்டமங்கையில் இறைவன் அருளுதல்:

வாரணாசியின் அட்சய வடமாகிய ஆலமரத்துக்கு நிகரானதும் யுகந்தோரும் வளர்வதுமான தெய்வ ஆலமரத்தடியில் இயக்கமாதர் அறுவரும் கருங்கட் பாறைகளாக ஆயிரம் ஆண்டுகள் கிடந்த காலத்தில், மதுரையம் பதியில் இந்திரன் தேவேந்திர விமானம் அமைத்து இறைவனை சோமசுந்தரக்கடவுளாக பூசித்து வரும் காலத்தில், மதுரையில் எழுந்தருளிய சொக்கேசன் ஞானாசாரிய வடிவம் கொண்டு ஆலமரத்தடியில் கற்பாறைகளாகக் கிடக்கும் அப்பெண்கள் முன்தோன்றி திருக்கண் பாலித்தார். உடனே அவர்கள் கற்பாறை வடிவம் நீங்கி முன்னைய தேவவடிவம் பெற்று எழுந்தார்கள்.

## பொற்றாமரையில் நீராடுதல்:

மதுரை பொற்றாமரைப் பொய்கைக்கு நீகரானதும் என்றும் உள்ளதுமான இத்தலத்தில் தானே தோன்றிய பொற்றாமரைப் பொய்கையில் நீராடி வினை மாசு நீங்கி குருவடிவாம் இறைவன் திருவடித் தாமரைகளில் வந்து வீழ்ந்து வணங்கினர்.

## இறைவன் பட்டமங்கலத்தில் கார்த்திகைப் பெண்களுக்கு அட்டமாசித்தி அருளுதல்:

சோமசுந்தரக்கடவுள் கார்த்திகைப் பெண்கள் அறுவருக்கும் பரிச சிவதீட்சை செய்து அட்டமாசித்திகளை மீண்டும் அவர்களுக்கு தெளிவுபட விளக்கி உபதேசித்து அருளினார். இப் புண்ணிய பூமியில் இறைவன் குரு வடிவில் வந்து சூக்குமமாக ஞானிகள், சித்தர்கள் யோகிகளுக்கு அருள்பாலிக்கின்றார்.

## அட்டமா சித்திகள்:

இச் சித்திகள் அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என எட்டுவகைப்படும் இவைகள் இறை அடியார்களை பின் தொடந்து அவர்களின்

அருள் விளையாடலாக அமையும் சிறப்பை உடையன.

**1. அணிமா என்ற சித்தி:**

மிகச் சிறிய உயிர்கள் தோறும் மிக நுண்ணிய அணு வாய்ச் சென்று அவற்றுள் தங்கும் நுண்மையே அணிமா என்ற சித்தி ஆகும்.

**2. மகிமா என்ற சித்தி:**

பிருதிவி (மண்) தத்துவம் முதல் சிவத்தத்துவம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நீங்காது நிறைந்து இருக்கும் பெருமையே மகிமா என்ற சித்தியாகும்.

''அறவுஞ் சிறிய உயிர்தொறுந்தான்
பரம காட்டை அணுவாய்ச் சென்று
உறையுஞ் சிறுமை அணிமாவாம்
உவரி ஞால முதன் மேலென்(று)
உறையுஞ் சிவானந்தம் ஆறாறும்
உள்ளும் புறமும் அகலாதே
நிறையும் பெருமை தனை அன்றோ
மகிமா என்றும் நிரம்பிய நூல்

(பரஞ்சோதி முனிவர்)

**3. இலகிமா என்ற சித்தி:**

மேருமலை போல மிகக் கனமாக இருக்கும் யோகியை எடுத்தால் இலேசான மிக நுணுகிய அணுவைப் போல கன மின்றி இருப்பதுவே இலகிமா என்ற சித்தியாகும்.

**4. கரிமா என்ற சித்தி:**

இலேசான மிக நுண்ணிய அணுவைப் போல மெலிந்தி ருக்கும் யோகியை எடுத்தால் மேருமலை போல கனமாக இருப்பதுவே கரிமா என்ற சித்தியாகும்.

''இலகு மேரு பாரம் போல்
இருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு வான பரவணுப் போல்
இருப்பது இலகி மாவாகும்

இலகு வான பரவணுப் போல்
    இருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு மேரு பாரம் போல்
    இருப்ப தன்றோ கரிமாவாம்:

(பரஞ்சோதி முனிவர்)

**5. பிராத்தி என்ற சித்தி:**

பாதாள லோகத்தில் உள்ள ஒருவன் பிரமலோகத்தில் புகுதலும், மீண்டும் பாதாள உலகத்தை அடைதலும் பிராத்தி என்ற சித்தியாகும்.

**6. பிராகாமியம் என்ற சித்தி:**

கூடுவிட்டு கூடு பாய்தலும், விண்ணில் உலாவுதலும் தான் விரும்பும் இன்பங்கள் அனைத்தையும் தானிருக்கும் இடத்தில் நினைத்த படியே வரச் செய்து அனுபவித்தலும் பிரா காமியம் என்ற சித்தியாகும்.

''பிலத்தில் இருந்தோன் அயனுலகிற்
    புகுதல் மீண்டும் பிலமடைதல்
பலத்தின் மிகுந்த பிராத்தியதாம்;
    பரகா யத்தின் நண்ணுதல் வான்
புலத்தின் இயங்கல் இச் சித்த
    போகம் அனைத்தும் தானிருக்கும்
தலத்தில் நினைத்த படிவருதல்
    பிராகா மியமாம் தவக் கொடியீர்

(பரஞ்சோதிமுனி)

**7. ஈசத்துவம் என்ற சித்தி:**

கடவுள் போல் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும் தன் விருப்படியே செய்து, சூரியன் முத லிய கிரங்களும் தன் ஏவல் கேட்க வீற்றிருப்பது ஈசத்துவம் என்ற சித்தியாகும்.

**8) வசித்துவம் என்ற சித்தி:**

அவுணர், பறவை, விலங்கு, பூதம், மனிதர் முதலிய பல்வகை உயிர்களையும் இந்திரன் முதலிய திக்குப் பாலகர்

எண்மரையும் தன் வசமாகச் செய்து கொள்வதுவே வசித்துவம் என்ற சித்தி ஆகும்.

''ஈச னெனமுத் தொழிலுந்தன்
இச்சை வழிசெய்து எழுபுரவித்
தேசன் முதற்கோள் பணி கேட்பத்
திகழ்வ(து) ஈசத் துவமாகும்
பூசல் அவுணர் புள் விலங்கு
பூதம் மனிதர் முதலுலகும்
வாச வாதி எண்மருந்தன்
வசமாக் கொள்கை வசித்துவமாம்.

-பரஞ்சோதி முனிவர்

## உமாதேவியார் காளிவடிவம் நீங்கி சௌந்தரியாதல்:

இத்தலத்தில் நாவல் மரத்தடியில் நவ்வையடிக் காளியாக கடும் தவம் இயற்றிய அம்பிகை, இறைவனால் ஆட்கொள்ளப்பெற்று தனது காளி வடிவம் நீங்கி அழகு சௌந்தரி அம்பாளாக திருவருள் கடாச்சித்தார். அம்பிகை இன்றும் கிராம தேவதையாக தனிக்கோயில் கொண்டு அருளாட்சி செய்வதைக் காணலாம். அன்னையின் திருக்கோயில் ஸ்ரீ மதியாத கண்ட விநாயகர் திருக்கோயிலுடன் சிவகங்கை தேவஸ்தானத்தால் நிர்வகிக்கப்பட்டு வருகின்றது.

## கார்த்திகைப் பெண்கள் அம்மை அப்பரை வழிபடுதல்.

பேரிறைவன் குருவடியில் வந்து அட்டமாசித்திகளை உபதேசிக்கும் உயர்ந்த பேறு பெற்ற இயக்க மாதர்கள் அறுவரும் மகேசனை கைகூப்பி அழுதும் தொழுதும் வழிபட்டார்கள்.

''யாம் மதுரை சொக்கேசன்'' --- என்னும் விண்ணொலி எழும்ப பேரிறைவன் அவர்களை ஆட்கொண்டு மறைந்தருளினார். கார்த்திகைப் பெண்கள் அறுவரும் இத்தலத்

தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து அம்மை அப்பரை வணங்கி பஞ்சாட்சரியாலும் பஞ்சதசாட்சரியாலும் தொழுது வணங்கி அம்மையப்பர் திருவருள் பெற்று திருக்கயிலையை அடைந்தனர்.

கார்த்திகைப் பெண்கள் இத்தலத்தில் திருக்கோயிலின் கீழ்புரம் திருமணி முத்தாற்றின் தென் கரையில் கோயில் கொண்டு அருளினர். கார்த்திகைப் பெண்களின் திருக்கோயில் கதம்ப மகரிஷியாம் அடைக்கலம் காத்தவருக்கு பூசை செய்யும் வேளார்களால் பூசை செய்யப் பெற்று சிறந்து விளங்குகின்றது.

## திருத்தலத் திருக்கோயிலின் மூர்த்தி:

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் முபபெரும் சிறப்புக்களைக் கொண்டு மணி முத்தாற்றால் வளம் பெருகும் இப்பட்ட மங்கலபதியின் மூர்த்தியாக மதுரை மீனாட்சி சுந்தரரான சொக்கேசன் அட்டமாசித்திக் கடவுளாக குருவாகவும், லிங்கமாகவும், சித்த யோகிகளின் சங்கமமாகவும் திகழ்கின்றார்.

அட்டமாசித்தி ஆலமரத்தின் அடியில் கிழக்கு நோக்கி அருள் செய்யும் மூர்த்தியே அட்டமாசித்தி தெட்சினாமூர்த்தி என்னும் திருப்பெயர் பெற்ற அட்டமாசித்திக் கடவுளாவார்.

பருவ வடிவம் பலவாய்த் திருமேனி காட்டி ஆட்கொள்ளும் பேரிறைவன் ஆன்மாக்களுக்கு போகம் அருளி அனுக்கிரகிக்க அன்னையோடு அருள் செய்யும் போக மூர்த்தியாகவும், மறக்கருணை செய்ய ஆயுதம் தாங்கி கால சம்ஹார மூர்த்தி முதலான கோர வடிவாகவும், சனகாதி நால்வருக்கு திருக்கையிலையில் தென்திசை நோக்கி வீற்றிருந்து சின்முத்திரை கொண்டு மோன உபதேசம் செய்யும் தெட்சிணாமூர்த்தியாகிய யோக மூர்த்தியாகவும் எழுந்தருளிச் செய்கின்றார்.

இப்பட்ட மங்கலத் திருக்கோயிலில் ''சிவம்'' என்னும் நாமம் தனக்கே உரிய செம்மேனி எம்மான் குருவடிவில் யோக மூர்த்தியாகவும், அன்னையாரோடு சேர்ந்து சோமசுந்தரக் கடவுளாக போக மூர்த்தியாகவும் எழுந்தருளுகிறார்.

கயிலையங்கிரியில் சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் ஆகிய நான்கு பிரம்ம குமாரர்களாகிய முதுமை மிக்க

மகரிஷிகளுக்கு திருவாய் மலராது சின் முத்திரை மூலமாகவே மேலான பெருநிலையை அறிவிக்கும் அண்ணல், இப்பட்ட மங்கலத் திருத்தலத்தில் மானிட உருவம் தாங்கி பூமியில் வலியவந்து, ஞானிகளை தாமே வலிய வந்தடையும் அட்டமாசித்திகளை ஒன்றுக்கு இரண்டு தடவையாக கார்த்திகைப் பெண்களுக்கு பரிச தீட்சை செய்து உபதேசிப்பது; இறைவன் எத்தகைய கருணை மிக்கவர் என்பதற்கு இதைவிடச் சான்றும் வேண்டுமோ? ஒரு பேராசிரியர் பால பாடமும் சொல்லிக் கொடுப்பாரோ? அறக்கருணையோ? அன்புச் செயலோ? முருகனை ''அறுவர் பயந்த ஆறமர் செல்வா! ஆல்கெழு கடவுள் புதல்வா!'' என்று நக்கீரர் அரற்றுவாரே, அந்தத் தொடர்பா? இனம் தெரியாத இதைத்தான் இறைவனின் திருவிளையாடல் என்று இயம்பினார்களோ'.

## அட்டமா சித்திக் கடவுளின் திருத்தோற்றம்:

இட்டகோடி யோசனை போந்து விண்மிசை முட்டும் வடதருவான ஆலமரத்தடியில் கிழக்கு நோக்கி அமர்ந்து உபதேசம் செய்யும் அருள் காட்சியைக் காண்போம்.

உலகமாகிய பாறையும் உலக வாழ்வாகிய ஆலமரமும் ஒன்றோடு ஒன்று இணைந்துள்ளது. பாறையோடு ஒன்றிச் சனகாதி முனிவர்கள் ஞானத்தில் இருக்கிறார்கள். இவர்களுக்கும் மேலாகத் திருமால் பன்றி உருவாகவும், பிரம்மன் அன்ன வடிவாகவும் தேடும் பிரபஞ்ச நிலை. அதற்கும் மேலாக வலிந்திமுக்கும் பரிசமாகிய மென்மைத் திருவடி. வீராசனம், மோகனமளிக்கும் மதிமுகம், முக்கண்கள் புன்னகை தவழும் சிவந்த திருவாய், அடர்ந்து நீண்டு தவழும் செஞ்சடைத் திருமுடி, பிறைமதி, கொன்றை, நான்கு திருக்கரங்களில் வலது மேற்கரத்தில் அக்னியும் வலது கீழ்கரத்தில் ஞான முத்திரையும் இடது மேற்கரத்தில் நாகமும், இடது கீழ்க்கரம் தொடையில் பொருந்தவும் முயலகனை அடக்கி அருள் செய்யும் திருவடியும் கொண்டு அருள் வழங்குவது, அருள்நிதி தரவரும் ஆனந்த மலையான சிவத்தின் சிறப்பத் திறன் கொண்ட திருத்தோற்றம். திருப்பொழிவுடன் விளங்குகின்றது.

குருவடிவாக திகழும் இத்திருத்தோற்றமே கார்த்தி

கைப் பெண்களுக்கு அட்டமாசித்திகளை அருளியும் சனகாதி முனிவர் மட்டுமல்லாது சகல முனி ஜனங்களுக்கும் உபதேசம் செய்யும் திருவடிவம் ஆகும். ''ச்ரியாவாஸீ உபதேச கரோ''- என்ற பிரம்மவாக்கின்படி ஸ்ரீவித்தையுடன் வசிப்பவராகவும், உபதேசம் செய்பவராகவும் விளங்குகின்றார்.

''வடவிடபிஸமீபே பூமிபாகே நிஷண்ணம்
ஸகலமுனி ஜனானாம் ஜ்ஞானதாதார மாராத்!
த்ரிபுவன குருமீசம் தட்சிண்ா மூர்த்தி தேவம்
ஜனன மரணது: க்கச்சேத தக்ஷம் நமாமி!!''

ஆலமரத்தடியில் பூமியில் அமர்ந்து எல்லா முனி ஜனங்களுக்கும் ஞான உபதேசம் செய்பவரும் பிறப்பிறப்பு துன்பத்தைப் போக்குவதில் வல்லவரும், மூவுலகிற்கும் குருவுமான ஸ்ரீ தெட்சினாமூர்த்தியை வணங்குகிறேன்.

## அம்பிக்கையின் திருத்தோற்றம்

ஆதியாம் பரம கருணை அரசின் இனிய திருவருளே ஒருங்கு திரண்டு அம்பிகையானது என்பர் அருளாளர்கள்

''ஓதி இருள் மூரல் ஒளி உற்ற குழைவு ஆகம்
மோது முலை, அற்ப இடை முற்றும் உன் நிதம்பம்
ஆதிபரன் இன்னருள் திரண்டு அருணம் ஆகும்
மாது ! நின் மலர்ப்பதம் மனத்தெழுதி வைத்தேன்.''

இத் தலத்து அம்பிகை மதுரை சொக்கர் நாயகியாக நின்ற திருக் கோலத்திலும், தவ வடிவில் காளி வடிவமாக நாவல் மரத்தடியி லும், சித் சொருபத்தில் அணிமாதி சக்திகளால் சூழப் பெற்ற திருவருட் பிரகாசமாகவும் விளங்கி அருளுகிறாள்.

''தேவி உன் இல்லம் சிவன் உறை

அந்த புரம் ஆனால்
யாவர் உனைக் கண்டு எய்துவர்?
இமையோர் முதலானோர்

ஆவல் கொடு எய்த்து, உன் வாயிலில்
அணிமாதிகளாலே
மேவிய சித்திப் பேறொடு
மீள்வர் ஆனாரே!

ஆகவே இததலத்து இறைவன் அருள, அம்பிகையின் அருட்க ருணையால் சித்திகள் செயல்படுகின்றன. அன்னையின் அருள் வெளிப்பாட்டிற்கு தூண்டும் சாதகமாக, சித்திகளைக் காட்டி யாவது தன் பக்கமாக ஆன்மாக்களை வழிப்படுத்துகிறான் இறைவன் என்னே! இறைவனின் திருவிளையாடல்.

## பாடல் பெறும் பாங்கு

பட்டமங்கலத் திருத்தலம் ஸைவ சமயக் குரவர் நால் வருள் முந்தியவரான ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகளால் திருவா சகக் கீர்த்தித் திரு அகவலில்

''பட்ட மங்கையிற் பாங்காய் இருந்தங்(கு)
அட்டமா சித்தி அருளிய அதுவும்'' - என்று வியந்து சுட்டப் பெறுதலையும், திருவாசக போற்றி திரு அகவலில்

''இத்தி தன்னின் கீழிரு மூவர்க்(கு)
..........அருளிய அரசே போற்றி'' என ஸ்ரீ மாணிக்கவாச கர் இத்தல இறைவனைப் போற்றிப் புகழ்வதையும் காணலாம்.

திருவிளையாடற் புராணம்,

''பட்ட மங்கைப் பழுமரமுதல்'' - என்றும்
திருவிளையாடற்போற்றிக் கலிவெண்பா,

''பட்ட மங்கைப் பாறையுறு''- என்றும்
திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்,

''சீருடைப் பட்ட மங்கலம் எனும் பதி ஒன்றுண்டு''
என்றும்

கடம்பவன புராணம்,

''தென்னாட்டிற் பட்டமங் கலத்தாற் கீழ்வீழ்ந்து

உரனுறுகல் லாகிக் கிடந்தீர்'' - என்றும்

திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், இத்தல விருஷத்தை

''இட்டகோடி யோசனை போந்து விண்மிசை முட்டும் ஓர் வடதரு'' - என்றும் புகழ்ந்து பாடுகின்றன.

வடமொழி ஆலாசிய மான்மியமும், வேம்பத்தூரார் திருவிளையாடற் புராணமும் இப்பகுதியின் தொன்மையை திருக்கோட்டியூர் ஸ்தல புராணமும் சிறப்புடன் பேசுகின்றன.

## திருக்கோயில் அமைப்பு

தெய்வத் தருவாகிய ஆலமரத்தையும், பொற்றாமரைப் பொய்கையையும் பூர்வலிங்கம், அம்பாள் குரு மூர்த்தங்களையும் உள்ளடக்கி ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகளால் கட்டப்பட்டு உள்ளதும் காரண ஆகம நெறியில் பூசைகள் நடத்தப் பெறுவதுமான ஆலய அமைப்பினைக் காண்போம்.

பட்டமங்கலத்தில் ஸ்ரீ மதியாத கண்ட விநாயகர் ஆலயத்தை மையமாகக் கொண்டு அமைந்துள்ள ரதவீதிகளைக் கடந்து தெற்கே மணிமுத்தாற்று பாலத்தின் வழியே சென்றால் ஸ்ரீ அட்டமாசித்தி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசப்பெருமாள் எழுந்தருளிய சிவாலயத்தை அடையலாம்.

இவ்வாலயம் கிழக்கு நோக்கிய சன்நிதியை உடையது. இவ்வாலயம் கிழமேல் நீளம் 174 அடியும், தென்வட நீளம் 87 அடியும் கொண்ட நீள் சதுரவடிவமாக அமைந்துள்ளது. சிவாலயத்தின் கீழ்புறம் 300 மீட்டர் தொலைவில் ஸ்ரீ அழகு சௌந்தர நாயகி திருக்கோயில் அமைந்துள்ளது. சிவாலயத்திற்கும் அன்னையின் ஆலயத்திற்கும் நடுவில் மணிமுத்து ஆற்றின் தென்கரையில் கார்த்திகைப் பெண்களின் திருக்கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய ராஜகோபுரத்தின் தென் பகுதியில் காவல் தெய்வம் ஸ்ரீ சமையக் கருப்பர் பூவரசு மரத்தடியில் கோயில் கொண்டும் சற்று கீழ்புரம் தள்ளி பதினெட்டாம் படிக் கருப்பர் திருக்கோயிலும் உள்ளது.

ஆலய மதிற்சுவர் ஓரம் வலமாக் செல்லும் போது

தென்பகுதியில் திருத்தலத் தீர்த்தமான அட்டமாசித்திப் பொய்கையும் மகாகணபதி மண்டவமும், பொய்கைக்கு தெற்கே பசு மடமும் ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் சமாதிக் கோயிலும் உள்ளன. அட்டமா சித்திப் பொய்கையான பொற்றாமரைக் குளத்திலிருந்து ஸ்ரீ மீனாட்சி அம்மையார் சன்னதிக்கு செல்லும் சிறு ராஜகோபுரம் தென்புற வாயில் உண்டு.

மேல் மதிற்சுவர் ஓரம் செல்லும் போது அழகிய நீராழி மண்டபத்துடன் கூடியதும் சிறந்த படித்துறைகளையும் உடைய பெரும் தெப்பக்குளம் ஊரவர் அனைவருக்கும் குடிநீர் வழங்கும் பெற்றியைக் காணலாம்.

திருக்கோயிலின் மதிலின் வடபால் ஓரம் செல்லும் போது தெய்வத் தன்மை பொருந்திய தலவிருட்சமான ஆலமரத்தையும் கிழக்கே முன் மண்டபத்துடன் கூடிய ஸ்ரீ அட்டமா சித்தி தெட்சினாமூர்த்திக் கடவுளின் ஆலயத்தையும் கண்டு தரிசிக்கலாம். ஆலமரத்தின் வடக்கே ஸ்ரீ தாயுமானவர் என்ற மகான் சமாதியான சுப்பிரமணிய சுவாமி ஆலயத்தையும் இன்னும் வடக்கே கதம்ப மகரிஷியாம் அடைக்கலம் காத்தவர், பூதகணங்கள் காவலுடன் ஆச்சிரமக் கோயில் கொண்டருளுவதையும் அரசமரத்தடியில் கற்பக சிந்தாமணி விநாயகர் வீற்றிருப்பதையும் காணலாம். அட்டமாசித்திக் கடவுளின் சன்னதியிலிருந்து ஆலயத்துக்குள் வருவதற்கு வடக்கு வாயில் ஒன்றும் உள்ளது.

கிழக்கு நோக்கி ஓங்கி நின்ற ஐந்து அடுக்குகளைக் கொண்ட ராஜகோபுரத் திருவாயிலுள் நுழைந்து ஆலயத்துள் செல்லும் போது திருமாளிகைப் பத்தி(பிரகாரம்), பற்பல கற்றூண்களில் அரிய சிற்பங்கள் நிறைந்த மண்டபம் முதலியன காட்சி தரும். இரவில் எங்கும் மின்விளக்குகள் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

திருமாளிகைப்பத்தியின் உயரமான மேல் பரப்பில் கிழக்கே துஜஸ்தம்பம் பலிபீடம், திருநந்திதேவர் இம்மூன்றும் அழகுடன் விளங்கும். அதற்கு அடுத்து மகாமண்டபம், அர்த்த மண்டபம், சுந்தரேசப் பெருமான் சிவலிங்க உருவில் எழுந்தருளிய கர்ப்பக்கிரகம் இம்மூன்றும் அமைந்துள்ளன.

மகாமண்டபத்தின் தென்பகுதியில் ஒருவாயில் தெற்

குத் திருமாளிகைப் பத்திக்குச் செல்ல அமைந்துள்ளது. மகா மண்டபத்தினுள் தென்பகுதி, மேல்பகுதிகளில் உற்ஸவ விக்கிரகங்கள் எழுந்தருளும் வகையில் உயரமான அழகிய திண்ணைகளும் உண்டு. இம் மகார மண்டபத்தில் ஸ்ரீ நடராசர், சிவகாமி அம்மையார் மாணிக்கவாசகர் தெற்கு மகா மண்டபவாயிலை நோக்கி வட பகுதியில் தனிசபையில் இருப்பதைக் காணலாம்.

மகா மண்டபத்தில் நடுப்பகுதியில் சிவசன்னிதிக்கு நேராக அதிகார நந்திதேவர், பலிபீடம், கண்ணாடிகள் இருப்பதைக் காணலாம்.

மகா மண்டபத்தை அடுத்த வெளிப்பரப்பில் வட பகுதியின் ஓரத்தில் தெற்கு நோக்கிய சந்நிதியாக ஸ்ரீ மீனாட்சியம்மையார் ஆலயம் அமைந்துள்ளது. அம்மையார் சந்நிதியின் இடப்புறம் நவக்கிரக ஆலயம் உள்ளது. அம்மன் சந்தியிலிருந்தவாறே சுவாமி கொடி மரம் திரு ந்தி தேவரையும் தரிசிக்க இடைவெளிகள் உண்டு.

இவ்வாலயத்துள் மேல் விதானப் பரப்பில் பல வர்ணங்களுடன் மிக அழகோடு கூடிய தெய்வ வரலாறுகள் கொண்ட ஒவியங்கள் காட்சி தருகின்றன. அக்காட்சிகளில் மதுரை சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடற் காட்சிகள், கண்ணப்ப நாயனார், பகிரதன் கங்கையை வரவழைத்தல், சமயக்குரவர்கள், தாடலையாகம், வள்ளி திருமணம், மார்க்கண்டேயர் கால சம்காரம், முதலானவைகள் இடம் பெற்றுள்ளன.

ஆலயத்துள் திருமாளிகைப் பத்தியின் வழியாக வலமாக வரும்போது தென் கிழக்கில் மடைப்பள்ளியும் கிணறும் சரக்கறையும் உள்ளன. மகா மண்டபத்தின் தெற்கு வாயிலின் எதிர்சார்பில் கல்விக்கிரக நால்வரும் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் உள்ளனர். திருமாளிகைப் பத்தியின் நிருதி திக்கில் விநாயகர், காசிலிங்கம், விசாலாட்சி, தண்டபாணி திருஉருவங்களும் திருமாளிகைப் பத்தியின் மேல் பகுதியில் தனியறைகளில் விநாயகர் சோமாஸ்கந்தர், அஸ்த்ரதேவர் முதலான சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த அழகிய செப்புத் திருமேனிகள், பூர்வலிங்கம் அம்பாள், இலட்சுமி சண்முகக்கடவுள் ஆகியோர் எழுந்தருளியுள்ளனர். வடக்குத் திருமாளிகைப் பத்தியின் வடக்கு வாயிலின் அருகில் கீழ்புரத்தில் பள்ளியறை, உற்ஸவ்

தெட்சினாமூர்த்தி, கார்த்திகைப் பெண்கள் உள்ள தனியறை வைரவர் சன்னதி முதலியன உள்ளன.

கிழக்குத் திருமாளிகைப் பத்தியின் திருவாயிலின் வடக்கிலும் தெற்கிலும் சந்திரரும் சூரியரும் உள்ளனர். சந்திரருக்கு வட சார்பில் திருவாபரண அறையும், நித்திய யாகசாலை அறையும் உள்ளன.

சுவாமியின் கற்பகிரக வெளிச்சுவரின் தென்பக்கம் ஸ்ரீ தெட்சிணா மூர்த்தி, நர்த்தன விநாயகரும், மேல் பக்கச் சுவற்றில் லிங்கோத்பவ மூர்த்தியும் வடபக்கச் சுவற்றில் கோமுகமும் பிரம்மாவும், துர்க்கையம்மையும் உள்ளன. கோமுகத்தின் எதிர்பக்கம் சண்டேஸ்வரர் சிறுவிமானத்துடன் கூடிய சிறு மண்டபத்தில் எழுந்தருளியுள்ளார்.

அட்டமாசித்திக் கடவுளின் திருச்சன்னதியின் எதிரில் சிறு நந்தவனமும், மகான்களால் கட்டப்பட்ட கேணி ஒன்றும் உள்ளது. மேலும் ஆலயத்தின் அக்கினி மூலையில் மிகப்பெரிய திரு நந்தவனங்கள் இரண்டும் உள்ளன. பொற்றாமரைக்குளம், தெப்பக்குளம் இவைகளைச் சுற்றிலும் தென்னைமரங்களும் ஆலயத்தின் வெளி நிருதி திக்கில். அ.வீர.அ தேவஸ்தான அலுவலகம், ஆலய சிப்பந்திகள், சிவாச்சாரியார்கள் குடியிருப்பும் அமைந்தள்ளன.

ஆண்டு தோரும் உத்திராயண காலத்திலும், தெட்சிணாயன காலத்திலும் சில தினங்கள் கதிரவனின் கதிர்கள் திருக்கோயிலின் கருவறையில் சோமசுந்தரேஸ்வர் மீதும், அட்டமாசித்தி கடவுளான தெட்சிணா மூர்த்தி திருவுரு மீதும், கதம்பவன ரிஷியான அடைக்கலம் காத்தவர் திருவுரு மீதும் ஒளி சொறிகின்றன.

இத்திருத்தலம் மொத்தம் ஏக்கர் 9.34 சதுரப்பரப்பில் அமைந்துள்ளது.



# பூசையும் திருவிழாவும்

சிவாலயங்களில் நாள்தோறும் காலை மாலையில் நடைபெறும் பூசை நித்திய பூசை என்றும், விசேட புண்ணிய நாட்களில் நித்திய பூசையுடன் விசேடமாகச் செய்யும் பூசை நைமித்திய பூசை என்றும் பெயர் பெறும்.

## 1. நித்திய பூசை:-

இத்திருக்கோயிலில் எழுந்தருளிய ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் முதலான மூர்த்திகளுக்கு நாள்தோறும் திருவனந்தல், காலசந்தி, உச்சிக்காலம், சாயரட்சை, இரண்டாம் காலம், அர்த்தசாமம் என்ற ஆறுகாலத்திலும் சிறப்பாக நித்தியப் பூசைகள் நடைபெற்று வருகின்றன.

## 2. விசேட பூசை:-

வருடாபிஷேகம், வினாயகர் சதுர்த்தி, நவராத்திரி, கார்த்திகை தீபம், திருப்பள்ளி எழுச்சிவிழா, மார்கழித் திருவாதிரை, மகர சங்கராந்தி, மாசி மகம், சிவராத்திரி பிரதோசம், அம்மாவாசை தினங்கள் முதலானவற்றில் விசேட பூசைகள் நடைபெறுகின்றன.

சிவாலயங்களில் திருவிழா நித்தியவிழா, விசேட விழா பெருவிழா என மூவகைப்படும்.

***1) நித்தியவிழா:*** இங்கு நாடோரும் அர்த்த சாம பூசை முடிந்து சொக்கர் பள்ளியறைக்குச் சிறப்பாக எழுந்தருளிச் செல்லும் உற்சவமே நித்திய விழா ஆகும்.

***2) விசேடவிழா:*** ஆடி அம்மாவாசை, தை அம்மாவாசை நாட்களில் அலங்காரச் சிறப்புடன் அட்டமாசித்திப் பொய்கைக்கு எழுந்தருளி தீர்த்தம் சாதித்தலும், பிரதோஷ நாட்களில் ரிஷப வாகனத்தில் பிரதோஷநாயகர் எழுந்தருளுவதும் விநாயகர் சதுர்த்தியின்போது விநாயகர் எழுந்தருளுவதும் நவராத்திரியில் அன்னை கொலுவிருந்து விஜயதசமியில் சந்திரசேகரர் அம்பு போடுதலும். திருக்கார்த்திகையில் வேலவர் எழுந்தருளி தீபோற்ஸவம் செய்தலும், மார்கழித் திருவாதிரை நாளில் ஸ்ரீ நடராஜப் பெருமான் ஆருத்ரா தெரிசன விழாவும் கோலாகலமாக நடைபெறுகின்றன.

இவ்வாலயத்தில் இன்றும் பிரம்மோற்ஸவமான பெரு விழா நடைபெறவில்லை.

## திருப்பணிகளும், நிர்வாகமும்

தொன்மை மிக்க இத்திருத்தலத்தின் கோயில்களான கதம்ப மகரிஷியான அடைக்கலம் காத்தவர் கோயிலும், ஸ்ரீ மதியாழகண்டவிநாயகர் அழகு சௌந்தரி அம்பாள் கோயிலும் சிவகங்கை மன்னர்களால் மானியங்கள் கிராமங்கள் விடப்பட்டு பட்டமங்கலம் நாட்டார் நகரத்தார்களால் நித்திய பூசைகள், பெருவிழாக்கள் நடைபெற்று வந்த போதிலும், அட்டமாசித்திக் கடவுளாம் தெட்சின மூர்த்திக்கும் பூர்வலிங்கம் அம்பாள் இணைந்த ஆலமரத்தடியில் இருந்த சிறு சிவாலயத்திற்கும் எவ்வித மானியங்களும் விடப்படவில்லை. இவைகள் தொன்மைக்காலம் முதல் ரிஷிகளாலும் பின் பிராமன சந்யாசிகளாலும் பூசை செய்யப்பட்டு தனிப்பட்டவர்கள் நிர்வாகத்திலேயே இருந்து வந்தன.

இருப்பினும் அரச நிருபங்களில் ''கேரள சிங்கவள நாட்டில் முட்டத்தூர் பட்டமங்கை, அட்டமாசித்தி, ஆண்ட பிள்ளை நயினார் நவ்வையடிக்காளி கரும்பீசர், மதியாதகண்ட விநாயகர், அழகுசௌந்தரி, மணிமுத்தாறு கிருபாகடாட்சத்தாலே''- என்று மகுடமிட்டு எழுதிய நிருபங்களைக் காணலாம்.

1930ல் ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகளான அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்கள் தனிப்பட்ட முறையில் தம் சொந்த பொருட்செலவில் காரண ஆகம முறைப்படி பரிவார தேவதைகளுடன் கூடிய நூதன ஆலயம் கல் திருப்பணிகள் செய்து பொற்றாமரைக்குளம் சீர்திருத்தி புதிய தெப்பக்குளம் வெட்டி ஸ்ரீ கதம்ப மிகரிஷி அட்டமாசித்தி தெட்சிணாமூர்த்தி கோவில் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகள். கோயில் இவைகளுக்கு கற்றளி எழுப்பியும் தனியொரு மனிதரே திருப்பணி செய்துள்ளார். இவர் தம் வரலாற்றையும் இவர் மகனார் வீரப்ப செட்டியார் அவர்கள் வரலாற்றையும் திருப்பணியாளர் வரலாற்றில் காணலாம்.

திருப்பணிச் செல்வர் அ.வீர. அடைக்கப்ப வள்ளல் அவர்களாலும் அவர்தம் குடும்ப அறக்கட்டளையாலும் இத்திருக் கோயிலின் நிர்வாகம் நித்திய படித்தரம் விழாக்கள்

அனைத்தும் நடைபெற்று வருகின்றன. இத்தருமங்கள் குறைவின்றி எக்காலத்தும் நடைபெற போதுமான அளவில் அ.வீர.அ. குடும்ப தர்ம அறக்கட்டளை நிறுவப்பட்டுள்ளது. திருப்பணிச் செல்வர்கள் அ.வீர.அ. வீர அடைக்கப்ப செட்டியார் அவர்களும், அ.வீர.ராம.வீரப்ப செட்டியார் அவர்களும் பரம்பரை அறங்காலவர்களாக திருக்கோயிலை நிர் வாகம் செய்து வருகின்றார்கள்.

## வழிபட்டுச் சிறந்தோர்.

பரசக்தியான அன்னையின் அருட்கடாட்சம் பெற்றதும், கதம்ப முனிவர், முதலான முனிகணங்கள். சித்தர்கள், யோகிகள் நிறைந்துமான கதம்பவன க்ஷேத்திரத்தில் இத்தலம் சோமசுந்தரக் கடவுளின் 64 திருவிளையாடல்களில் 33ஆம் திருவிளையாடலான அட்டமாசித்தி உபதேசித்த திருவிளையாடலைச் சேர்ந்தது. இங்கு கதம்ப முனிவர், வான்மீகி முனிவர் முதலான முனிகணங்கள் வழிபடுச் சிறந்தனர்.

கார்த்திகைப் பெண்களான இயக்கமாதர் அறுவரும் இத்தலத்தில் அட்டமாசித்திகள் இறைவனால் அருளப்பெற்று சிறப்புப் பெற்றனர்.

இத்தலத்தில் உமாதேவியார் காளிவடிவம் நீங்கி சௌந்தரநாயகியாக அழகு உருவம் பெற்றார். மாணிக்க வாசக சுவாமிகள் இத்தலத்தையும் மூர்த்தியையும் சிறப்புற பாடி வழிபட்டார்.

இத்தலத்தில் பன்னெடுங்காலத்துக்கு முன் தாயுமானவர் என்ற மகான் ஒருவர் இத்தலத்தில் வழிபட்டு சித்தியடைந்தார். இவரது யோக சமாதி இன்றும் சுப்பிரமணிய சுவாமி கோயிலாக விளங்குகின்றது.

பூமனகரம் என்று அழைக்கப்படும் பூங்குடியில் சித்து விளையாடல்கள் செய்து கோயில் கொண்ட மிளகாய் சாமியின் அருள் பெற்றவரும், அவரது சிஷ்யையுமான சாது ஆனந்த அம்மையார் இத்தலத்தில் வழிபட்டு மகாசமாதியடைந்தார் இவரது சமாதிக் கோயில் மேலரத வீதியில் உள்ளது.

இத்தலத்தில் தோன்றிய ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் இத் திருக் கோயிலுக்கு கல் திருப்பணிகள் செய்தும் லிங்கப்பிர

திஷ்டை செய்தும் தெப்பக்குளம் வெட்டியும், பொற்றாமரை குளம் கல் திருப்பணி செய்தும் கோயிலுக்குத் தேவையான வாகனங்கள் திருவாபரணங்கள் செய்தும் ஆகமப்படி நித்திய ஆட்ட விசேசங்கள் சிறப்புற அமைய குடும்ப தர்ம டிரஸ்ட் ஏற்படுத்த பெரும் பொருள் தேடிக் கொடுத்தும் திருப்பணிச் செல்வராகவும் வள்ளலாகவும் வாழ்ந்து சன்னியாச நெறி நின்று மகாசமாதிடைந்து கோயில் கொண்டு விளங்குகிறார். இவர் தம் வரலாற்றை திருப்பணியாளர் வரலாற்றில் காண லாம்.

இத்திருத்தலத்திற்கு ஸ்ரீ சிருங்கேரி ஜெகத்குரு சங்க ராச்சாரிய சுவாமிகளும் ஸ்ரீலஸ்ரீதிருச்சி சுவாமிகளும் பல நாட் கள் முகாம் செய்து இறைவனை வழிபட்டுள்ளார்கள். நடமா டும் தெய்வம் ஜெகத்குரு சுவாமிகளும் பல நாட்கள் முகாம் செய்து இறைவன்ன வழிபட்டுள்ளார்கள். நடமாடும் தெய்வம் ஜெகத்குரு பரமாச்சாரிய சுவாமிகளுக்கு இத்தலம், மனதிற்குப் பிரியமான திருத்தலமாகும்.

## வழிபாட்டின் பயன்

ஒவ்வொரு மனிதரும் தம் இறைமைத் தன்மையை உணர்ந்து தம்மை உயர்த்திக் கொள்வதே வழிபாட்டின் பயன் ஆகும். இதற்கு திருக்கோயில்கள் சிறந்த சாதனங்களாக அமைந்துள்ளன. (வழி-பாதை;பாடு-ஒழுக்கம், செயல்) தம் செயலாகிய ஒழுக்கத்தை நல்ல வழிப் படுத்தி செயல்படுவதே வழிபாடாகும்.

இத்திருத்தலத்தில் எழுந்தருளி அருள் செய்யும் குருவடி வான இறைவன் மக்களுக்கு போகத்தை தந்து மேலான வாழ்வை அருள்கிறார். இங்கு வந்து வழிபடும் அன்பர்கள் புத்திர பேறு வேண்டுவோர், தீராத நோய் தீரவேண்டுவோர், இஷ்ட சித்தி வேண்டுவோர் ஆவர்.

இங்கு இஷ்டசித்தியடைதல் ஏராளம் புஷ்பவதியாகாத பெண்கள், புத்திரப்பேறு இல்லாதவர்கள், திருமணம் தடைப் படுவோர், பூர்வ ஜென்மத்திலும், இந்த ஜென்மத்திலும் கல் வியை பிறர் கற்க தடையாகவும், கல்வியை பிறர் அறியாவன் னம் மறைத்தோர் ஆகியோர் தம் பாவம் நீங்கவும் சிறந்த பேற் றின்ன அடையவும் இத்தலத்திற்கு வந்து வழிபடுகின்றனர்.

அட்டமாசித்திக் கடவுளையும், தெய்வ ஆலமரத்தை யும் நூற்றுக்கணக்கில் பிரகாரம் வலம் வந்து வழிபாடு செய் கின்றனர். ஒவ்வொரு வியாழக்கிழமையிலும் அமாவாசை தினங்களிலும் இத்தலத்திற்கு வந்து பொற்றாமரைப் பொய்கை யில் தீர்த்தமாடி அட்டமாசித்தி இறைவனை ஏராளமானவர் கள் வழிபட்டு சென்று வருதலைக் காணலாம்.

33ம் திருவிளையாடல் நடைபெற்ற இடமான இத்திருக் கோயிலில் சூக்குமமாக சித்தர்களும் யோகிகளும் வந்திருந்து வழிபடுகிறார்கள் என்பது ஸ்தல ஐதீகம். இத்தலத்தில் எழுந்த ருளும் இறைவன் மக்களுக்கு இக வாழ்வில் எல்லாவிதமான போகங்களும் தந்தும் சிவ நெறியில் அட்டமா சித்திகள் முத லான பெரும் பேறு தந்தும் வழிப்படுத்தி ஆண்டு கொள்வது சிறப்புடையதாகும்.

## திருப்பணிச் செல்வர்கள் வரலாறு

அகில உலகெங்கிலும் அணுத்தோரும் ஆட்சி செய் யும் அருள் வடிவாம் பராசக்தியான அன்னை, தன் கணவரும், ஆதாரமுமான சிவத்தின் அருள் லீலைகளையும், பெருமைக ளையும் செவிமடுப்பதில் பிரியம் உள்ளவளாகவும், சிவமா கிய செம்பொருள் தம் அடியவர்களின் பெருமைகளை கேட்ப தில் பேரவா உடையவராகவும் உள்ளனர் என்பது நமது சாஸ்த் திரங்கள் அறிவிக்கும் உண்மையாகும்.

''இறைவன் தொண்டர்க்குள் அடக்கம், தொண்டர் தம் பெருமையை சொல்லவும் எளிதோ''

தொன்மையும் சிறப்பும் மிக்க இத்திருத்தலமான பட்ட மங்கலத்தில், பிறந்தும் இளமைக்காலம் முதல் இத்தலத்து இறைவனுக்கு பக்தனாக இறையருளாலே வாழ்ந்தும் தனி யொருவரே நேர்மைமிக்க நெறியில் பெரும் பொருள் வாணிப வழியில் தேடி தனக்கென்று வாழாமல் தம் வழிபடு கடவுளாம் இறைவனுக்கே தன்னை ஆளாக்கி, சமயத்தையும் சமுதாயத் தையும் வேறுபடுத்தாமல் தன் இரு கண்களாகக் கொண்டு, திருப்பணியும் அறப்பணியும் செய்து, தனிமனிதன் எத்தகைய நெறியில் வாழ வேண்டும் என்பதற்கு இலக்கணமாக, இலக்கி யமாக வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து, வான் உறையும்

தெய்வமாக இத்திருத்தலத்திலேயே தன் இறுதிக் காலத்தில் சன்யாச நெறிநின்று துவராடை பூண்டு, மகா சமாதியடைந்து. தனிக்கோயில் கொண்டு இத் தலத்திற்கு தரிசிக்க வருவோர் அனைவரையும் தம்மைப் போலவே வாழ வழிகாட்டி அருள் வழங்கும் வள்ளலாம், ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் வரலாற் றையும், அவர்தம் வழிமுறையினர் வாழ்க்கையையும் காண் போமாக.

## ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் அவர்கள் வரலாறு

## இருப்பிடம், பிறப்பும்:

பாண்டிவள நாட்டில் சிவகங்கை சீமையில் திருப் பத்தூர் தாலுகா, பட்டமங்கலம் என்னும் திருத்தலத்தில், ஊரின் தொன்மைக் குடிகளில் ஒன்றான, சூரக்குடிக்கோயில் நகரத் தனவணிகர் நற்குடியில் சைவ சமய மரபில் வந்த அ. வீரப்ப செட்டியார் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரது மனை வியார் தெய்வானை ஆச்சி ஆவார். இவர்கள் செய்த பெரும் புண்ணியப் பேற்றால், சின்னான் செட்டியார், அடைக்கப்ப செட்டியார் என்ற இரு புதல்வர்கள் பிறந்தனர். பெண்மக்கள் நால்வர் பிறந்தனர். அதில் ஒரு பெண், சிறுவயதில் தெய்வீக மாகிஇன்றும் குடும்ப தெய்வமாக இருந்து வருகிறது. அவர்க ளுள் இளையவரான அடைக்கப்ப செட்டியார் அவர்கள் சித் தார்த்தி ஆண்டு புரட்டாசி மாதம் 15ம் தேதி *(2.9.1859)* வியாழக் கிழமை சுவாதி நட்சத்திரத்தில் தோன்றினார்.

## இளமைக் கல்வி:

அடைக்கப்ப செட்டியார் அவர்கள் இளமை வயதில் கல்வி பயின்று நல்லொழுக்கம், அன்பு, அருள், கடவுள் பக்தி முதலிய நற்பண்புகளுடன் உண்மைக்கு உறைவிடமாகவும், இன்முகமும், எளிமையும் கொண்டு யாவரிடமும் பழகுபவர். உயர்ந்த எண்ணங்களை எண்ணி அவற்றை செய்து முடிக்க வல் லவர்.

## இல்வாழ்க்கை:



அடைக்கப்ப செட்டியார் அவர்கள் தக்க வயதில் தம் குலத்தில் கல்லல் ஆ.மு.அவர்கள் புரத்தில், நற்குணம் வாய்ந்த நாச்சம்மை ஆச்சி என்னும் நங்கையை நன்னாளில் திருமணம் புரிந்து யாவரும் உவக்க இல்வாழ்க்கையில் ஈடுபட்டார் அப் போது விருந்தினரை உபசரித்தலும் துறந்தாரைப் பேணுதலும், கற்றோரை ஆதரித்தலும், கடவுள் பக்தியில் திளைத்தலும் ஆகிய நற்செய்களைத் தம் கடமையாகக் கொண்டார்.

## சித்தர் வணக்கம்:

அடைக்கப்ப செட்டியார் அவர்கள் பூங்குடியில் இருந்த மதுரைச்சாமி என்ற சித்தரை அடிக்கடிதம் மனைவியா ருடன் சென்று தரிசித்து வருவது வழக்கம். அவருக்கு வேண் டிய உபசாரங்களைச் செய்து தம்பதிகள் மகிழ்வார்கள். மேலும் அடைக்கப்ப செட்டியார் அவர்கள் அட்டமாசித்தி இறைவனி டம் அதிக ஈடுபாடும் பக்தியும் உடைவர். இவர் மனைவியார் நாச்சம்மை ஆச்சி அவர்கள் இத்திருத் தலத்தில் கோயில் கொண்ட ஜெகத் அன்னை அழகு சௌந்தரி அம்பாளிடம் அள வற்ற ஈடுபாடு கொண்டு அடிக்கடி தரிசித்து வரும் வழக்கத் தைக் கொண்டவர்.

## இலங்கை செல்லல்:

அடைக்கப்ப செட்டியார் அவர்கள் தம் எண்ணங்க ளும் சிந்தனைகளும் செயல்படவேண்டியும், தம்குடி உயர வேண்டியும் பொருள்தேட பேரவாக் கொண்டார். அது நிமித் தம் கடல் கடந்து சென்று வாணிபம் நடத்தத் துணிந்தார்.

திரைகடல் ஓடியும் திரவியம் தேடு-என்று முதுமொ ழிக்கு இணங்க தன் 28ம் வயதில் கி.பி.1887ம் ஆண்டு இலங்கை சென்றார். தன்குலத் தொழிலான லேவாதேவித் தொழிலை செய்ய முற்பட்டு எதிர்பாராதவகையில் தொழில் சரிவு நேர்ந் தது. தாம் கொண்டு சென்ற கைப்பொருளும் இழந்து மனம் நொந்தார். இருப்பினும் அவரது தெய்வ பக்தியும், பெரியோர் களிடம் கொண்ட அன்பும், நேர்மையும் அவருக்குக் கைகொ டுத்து உதவின.

கொழும்பில் முஸ்லீம் சாயிபு ஒருவர் தாம் பெற்ற கடனுக்குப் பதிலாக நம் செட்டியார் பால் அவரின் சிறு சாப்புக் கடையை ஒப்படைத்தார். அந்த சாப்புக் கடையில் சாயிபுவிடம் வேலைசெய்து வந்த குத்தாலம் பிள்ளை அவர்களையும் அம்பாசமுத்திரம் சங்கர ஐயர் அவர்களையும் வைத்து செட்டியார் அவர்கள் அவர்களை தம் இரு கண்களாக கொண்டு தொழில் நடத்தினார்கள் பிள்ளை அவர்களும், ஐயர் அவர்களும் கடையை ஊக்கத்துடன் நடத்தி வாணிபத்தை பன்மடங்கு பெருக்கி வருவாயைப் பெருக்கினார்கள். இந்தியாவில் மதுரை, சென்னை, பாம்பேயில் வாணிபக்கிளைகளை ஏற்படுத்தினார்கள். பர்மாவில் சிக்கூன் நகரில் கல்லுப்பட்டி பழ.மெ.சாமிநாதன் செட்டியார் அவர்கள் கூட்டுடன் கடை வைத்தார்கள்.

## நன்மக்கள் பெறுதல்:

அடைக்கப்ப செட்டியார் அவர்களுக்கும் நாச்சம்மை ஆச்சி அவர்களுக்கும், இறையருளால் மூன்று பெண் குழந்தைகளும் கி.பி.1900ம் ஆண்டில் அழகிய ஆண் குழந்தையும் பிறந்தது. ஆண்மகவுக்கு வீரப்பன் என்று பெயர் சூட்டி சீராட்டி வளர்த்து வந்தனர்.

## மதுரைச் சாமிகளின் ஆசிமொழி:

நம் அ.வீர.அ. செட்டியார் அவர்கள் கொழும்பில் வாணிபத்தில் ஈடுபட்டு இருக்கும்போது துணைவியார் நாச்சம்மை ஆச்சி அவர்கள் தம் ஊரிலிருந்து அடிக்கடி பூங்குடி சென்று சித்தனாம் மதுரைச் சாமிகளைத் தரிசித்து வருவார்கள். அவ்வாறு ஒருநாள் ஆச்சி அவர்கள் சாதுவை வணங்கி நின்ற போது, சாது அவர்கள் அதிகம் பேசாமல், ''மாட மாளிகை கூடகோபுரம் கட்டு'' - என்று அருள்மொழி வழங்கினார்கள். அதனை ஆச்சி அவர்கள் கேட்டு மிக மகிழ்ந்து தம் ஊர் திரும்பினார்கள்.

## கொழும்பிலிருந்து செட்டியார் தம் ஊர் வருதல்:

நம் செட்டியார் அவர்கள் கொழும்பில் இருக்கும் போது அவர்களிடம் செல்வ நிலையும் தருமம் புரியும் உணர்வும் இணைந்து வளர்ந்தன. அறப்பணி புரியும் பெரு வேட்கை

யுடன் பெரும் பொருள் கொண்டு தம் ஊராகிய பட்டமங்கலம் வந்தார். தம் மனைவியர்பால் மதுரைச் சுவாமிகள் அருளிய அருள்வாக்கைக் கேட்டு அகமகிழ்ந்தார்.

''எண்ணியர் எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்'' - என்ற வள்ளுவன் வாக்கின் படி தம் உழைப்பும் ஊக்கமும் தம் இளமை காலத்தே தம் மனத்தில் உருவேற்றிய நல்ல திட்டங்களும், இறையருளும் இறையடியார் வாக்கும் நம் அடைக்கப்ப அய்யா அவர்கள் வாழ்வை நிலைபெறச் செய்தன.

## ஸ்ரீ அடைக்கப்ப ஐயா அவர்களின் சாதனைகள்:

''ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறிவாளன் திரு'' - என்ற மறைமொழிக்கு ஏற்ப அய்யா அவர்களின் பண்பும் செயலும் இருந்தன. பூங்குடி சித தர் மதுரைச்சாமிகளின் வாக்கிற்கிணங்க மாடமாளிகை கட்ட திருஉள்ளம் கொண்டார்கள்.

கி.பி.1911-12ம் ஆண்டில் தமக்குத் தனியாக வீடுகட்ட தனியாக இடம் வாங்கிக் கட்ட ஆரம்பித்தார். அதே ஆண்டில் திருத்தல அட்டமாசித்தி பொற்றாமரைப் பொய்கையில் முதல் தூர்வை எடுத்து சீர்திருத்தம் செய்தார்.

1911-12ம் ஆண்டிலேயே பட்டமங்கலம் நாட்டுத் தெய் வமான வடக்கு வீதி ஸ்ரீ முத்து முனியய்யா கோயிலுக்கு தமிழ் விரோதி கிருது வருடம் ஐப்பசி மாதம் 24ம் தேதி வேலை ஆரம்பித்து கட்டிடம் கட்டினார்கள்.

1914-15ம் ஆண்டில் வீடுகட்டி பூர்த்தி செய்யப்பட்டது. அச்சமயத்தில் பட்டமங்கலம் நாட்டு அதிதேவதைகளான ஸ்ரீ மதியாதகண்ட விநாயகர், அழகு சௌந்தரி அம்பாள், திருக் கோட்டியூர் ஸ்ரீ சௌமிய நாராயணப் பெருமாள் திருத்தேர்க ளுக்கு தேவையான தேர்வடச்சங்கிலிகள் வாங்கிக் கொடுத்தார் கள்.

1916ம் ஆண்டு சூன் மாதம் 11ம் தேதி, ஸ்ரீ அட்டமாசித்தி ஆலமரத்தின் மேற்கே 5 ஏக்கர் அளவில் குடிநீர் தெப்பக்குளம் கட்ட திருவுள்ளம் கொண்டு, தெப்பக்குளம் வெட்டுவதற்கு சிவகங்கை மன்னர் அவர்களின் பிரதிநிதி சிவகங்கை எஸ்டேட் கலெக்டர் திரு. ஹெச்.எஸ். சீல்டு துரை. ஐ.சி.எஸ் அவர்களிட மிருந்து டிஸ்ட் 1567/சி./1916 மூலம் ஆர்டர் பெற்று குளம்

வெட்டத் தொடங்கினார்கள். ஸ்ரீ ராட்சச வருடம் பங்குனி மாதம் 26ம் தேதி மேற்படி பெரிய தெப்பக்குளத்திற்கு தட்சு செய்து தொடங்கி கட்டி முடித்தார்கள்.

கி.பி. 1915-16ம் ஆண்டு வைகாசி மாதம் ஸ்ரீ அடைக் கப்ப அய்யா அவர்கள் தம் மகனார் வீரப்ப செட்டியார் அவர்க ளுக்கு பெரும் பொருள் செலவில் கல்லல் நா.வயி அவர்கள் புரத்தில் திருமணம் செய்து வைத்தார்கள்.

ராட்சச வருடம் ஆனி மாதம் 13ம் தேதி தம்குல தெய்வ மான கடியாபட்டி சாஸ்த்தய்யா கோவிலுக்கு தேர்முட்டி கட்ட தொடங்கி, கட்டி கொடுத்தார்கள். 1917 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 29ஆம் தேதி சிவகெங்க ஜமீன் லெசி ஏஜென்ட் மில்லர் துரை அவர்கள் மூலமாக ரிசீஸ்தர் பதிவு டாக்குமென்ட் நம்பர் 2348/1.12.1917 படி அட்டமாசித்தி பொற்றாமரைக் குளத்தின் மேல்புரம் பட்டத்திக் கண்மாய் சர்வே 138/1,138/2 நிலங்களில் தம் பணியாளர்கள், குடியிருக்கவும் தம் அலுவலகம் அமைக்க வும் கட்டிடங்கள் கட்ட உத்தரவு பெற்று தேவையான நசர் தொகை கட்டி விடுதி அலுவலகம் அக்ரகாரம் முதலியன கட் டத் தொடங்கி கட்டிடம் கட்டிப் பூர்த்தி செய்தார்கள்.

1917-18ம் ஆண்டு பிங்கள வருடம் பங்குனி மாதம் 15உ பட்டமங்கலம் மேலரத வீதியில் கட்டடங்கள் கட்ட ஆரம் பித்து கட்டிமுடித்தார்கள்.

பட்டமங்க திருத்தலத்தையும் ஊரையும் மற்ற பெருந கர்களுடன் இணைக்க விரும்பி 1918-19ம் ஆண்டு காளயுத்தி சித்தரை மாதம் 16உ சிவகங்கை ஜமீன் கலெக்டரிடமிருந்து பெர்மிசன் பெற்று கண்டரமாணிக்கத்திலிருந்து திருக்கோஷ்டி யூர் வரை சாலை அமைக்க தம் சொந்தச் செலவில் காணிகள் வாங்கி அதன் வழியே தம் சொந்தச் செலவில் 37 சிறு பாலங் கள், ஒரு பெரும்பாலம் (கோயிலையும் ஊரையும் இணைப் பது) உள்பட கட்டி முடிந்து ரோடு போட்டு 1922ம் ஆண்டு அக்டோபர் 29ம் தேதி இராமநாதபுரம் டிஸ்ட்ரிக்ட் பிரசி டென்ட் ஆக இருந்த ராமநாதபுரம் மன்னர் சேதுபதி அவர்க ளைக் கொண்டு திறப்புவிழாச்செய்து ரோடுகளைப் பராமரிக்க டிஸ்ட்ரிக்ட் போர்டு வசம் ஒப்படைத்தார்கள்.

பட்டமங்கலத்திலிருந்து கத்தப்பட்டு சொக்கநாதபுரத்துக்கும் இவ்வாறே ரோடு அமைத்துக் கொடுத்தார்கள்.

1919ம் ஆண்டு பட்டமங்கலத்திற்கு பெருமுயற்சியில் தபால் அலுவலகம் திறக்க ஏற்பாடு செய்துள்ளார்கள்.

1919-20ம் ஆண்டு சித்தார்த்தி வருடம் ஆவணி மாதம் 4ம் தேதி புதன் கிழமை ரோகினி நட்சத்திர சித்தயோக நன்னாளில் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர் கோயில் கட்ட கல் திருப்பணிகள் செய்ய பாலாலய ஸ்தாபிதம் செய்தார்கள்.

சித்தார்த்தி வருடம் ஐப்பசி மாதம் 13௨ கோயில் கட்ட இடம் சுத்தம் செய்தும் தை மாதம் 26ம் தேதி திருக்கோயில் கட்ட தட்சும் செய்தார்கள்.

கோயில் திருப்பணிகளுக்கான கல் தட்சு வேலைகள் செம்மையாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. கோயில் கட்டவும் பொற்றாமரைக் குளம் படித்துறையுடன் கூடிய கல் சுவர் முதலியன கட்ட சிவகங்கை எஸ்டேட் கலெக்டர் ஏ.மெக்.சி. டாமோ. ஐ.சி.எஸ் துரை அவர்களிடமிருந்து ஆர்டர் நீ ஆர்.சி. 468/9 1922ம் ஆண்டு ஆர்டர் வாங்கப் பெற்றார்கள்.

தான் நிர்மாணித்த புதிய கருவறை மண்டவம் மகா மண்டவம், திருமாளியைப் பத்தி உள்ளட்டவைகள் கல்திருப் பணிகளிலும் ஸ்ரீ அம்பாள் கருவறை கருங்கல் திருப்பணியாகவும் ஸ்ரீ உற்ஸவ தெட்சிணா மூர்த்தி, தென் திசை நோக்கும் ஆலமர செல்வர், பள்ளியறை, சன்டேசுவர் இவர்களுக்கு கருங் கல் திருப்பணியாகவும் அமைத்தார்கள். ராமநாதபுரம் சமஸ்தான சேதுபதியின் பேருதவியுடன் ராமேஸ்வரத்திலிருந்து சிவ லிங்கம் கொண்டுவந்தது கருவறையில் பிரதிஸ்டை செய்தார்கள். மீனாட்சி அம்பாளுக்கும் புது விக்கிரகமும் பரிவார தேவதைகள் அனைத்துக்கும் புது விக்கிரகங்களும் அமைத்தார்கள்.

1923ம் ஆண்டு நவம்பர் 29ம் தேதி சிவகங்கை மன்னர் முத்துவிஜய ரெகுநாத ராஜ துரை சிங்கமாகிய கௌரிவல்லபத் தேவர் அவர்களின் பிரதிநிதி எச்.ஏ.வாட்சன் ஐ.சி.எஸ் துரையவர்களிடமிருந்து நம்பர் 370/1924 ரிஜிஸ்தர் டாகுமென்ட் மூலம் கோயில் பொற்றாமரைக் குளம் முதலிய கட்டிக் கொண்டதற்கு உத்தரவும், கோயிலுக்கு ஆண்டுக்கு ரூ300/=க்கு குறையாத வரு

மானமுள்ள சொத்து எழுதி வைக்க எச்.ஓ.டி.. 136/18.1.24 உ உத்தரவு பெற்றார்கள். 1923-24ம் இவ்வூருக்கு பள்ளிக்கூடம் அமைத்தார்கள்.

1924-25ம் ஆண்டு ரக்தாட்சி வருடம் கீழத்தெரு ஸ்ரீ வெள்ளானை அய்யனாருக்கு சவுக்கை ஒன்றும் கட்டிக் கொடுத்தார்கள்.

1928ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 19ஆம் தேதி கோயிலுக்கு அருகில் உள்ள சர்வே 137நி இடங்களை பெரிய கருப்பன், சமையன் முதலான 14 பேர்களிடமிருந்து கிரையம் பெற்று அந்த இடங்களைச் சேர்த்து பெரிய நந்தவனம் அமைத்தார்கள். 14 பேர்களுக்கும் குடியிருப்புக்கு தனியிடம் விட்டுக் கொடுத்தார்கள்.

சிவகங்கை மன்னர் அவர்களின் திசை காவல் பண்ணை நிலமான காட்டாம்பூர் கிராமம் சர்வே 115/5 ஏக்கர் 1.75, சர்வே 117 ஏக்கர் 8.96, சர்வே 117 ஏக்கர் 7.92. இவைகளை விலைக்கு வாங்கியும் கீழப்பட்டமங்கலம் கவுல் சர்வே 145/11 ஏக் 0.47 சர்வே 144/11 ஏக்கர் 1.46ம் சேர்த்து 1930ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 8ம் தேதி நம்பர் 1594 மூலம் திருக்கோயிலுக்கு படித்தரத்துக்கு எழுதிவைத்தார்கள்.

1930ம் ஆண்டு கதம்பவன க்ஷேத்திர அதிபதியான கதம்ப ரிஷியாம் அடைக்கலம் காத்தவருக்கு கற்றளி எழுப்பி முதலில் கும்பாபிஷேகம் செய்தும் பின் அதே ஆண்டு பிரமதூத வருடம் வைகாசி மாதம் 6ம் தேதி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயிலுக்கு கும்பாபிஷேகமும் நடத்தி வைத்தார்கள்.

ஸ்ரீ அடைக்கப்ப அய்யா அவர்கள் சிவகங்கை சமஸ்தானம் திவான் R. சுப்பிரமணிய அய்யர் பி.ஏ. அவர்கள் மூலம் டாகுமென்ட் நம்பர் 715/ஏப்ரல் 1934ம் ஆண்டு எண் மூலம் அட்டமாசித்தி தெட்சிணா மூர்த்தி சுவாமிக்கு கோயில் கட்ட ஆர்டர் பெற்று ஸ்ரீ அட்டமாசித்திக் கடவுளின் கருவறை முன் முகப்பு மண்டவம் கட்டினார்கள். திருக்கோயில் தல விருட்சமான ஆலமரத்தைச் சுற்றிலும் இரும்பு கிராதி வேலி அமைக்க கல் தூண்களும் நட்டார்கள்.

சென்னை இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை கமிஷனர் மூலம் போர்டு ஆர்டர் நம்பர் 2239/6.9.1937 படி ஸ்ரீ அட்டமாசித்தி, ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயங்களுக்கு தாமும் தம் வாரிசுகளும் பரம்பரை அறங்காவலர்களாகவும் திருக்கோயிலை ''எக்செம்ப்ட்டெட் டெம்பிள்'' ஆக செய்துகொண்டார்கள்.

ஸ்ரீ அடைக்கப்ப அய்யா அவர்கள் 1940-41ம் ஆண்டு விக்கிரம வருடம் தன் பொருட் சிலவில் ஆலயம் அமைத்து, ஸ்ரீ அட்டமாசித்தி தெட்சினா மூர்த்தி கோயிலுக்கு திருக்குட நன்னீராட்டு விழாச் செய்தார்கள்.

1944ம் ஆண்டு ஸ்ரீ தாயுமானவர் என்ற மகானின் சன்னதியான ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிகளுக்கு தம் சொந்தச் சிலவில் கற்றளி எழுப்பி 1944ஆண்டு செப்டம்பர் மாதம் மகாகும்பாபிஷேகமும் செய்து வைத்தார்கள்.

பட்டமங்கலத்திலிருந்து திருப்பத்தூர் ரோடு வரை பட்டமங்கலம் வீர.சொக்கலிங்கம் செட்டியாருடன் சேர்ந்த குறுக்கு ரோடு அமைத்தார்கள்.

ஸ்ரீ அடைக்கப்ப அய்யா அவர்கள் கோயிலுக்கு வேண்டிய பஞ்ச மூர்த்திகளுக்கான வெள்ளி வாகனங்களும், வெள்ளிக் குதிரை வாகனமும் மூலஸ்தானம் உத்ஸவ விக்கிரகங்களுக்கான வெள்ளித் திருவாபரணங்களும் செய்து வைத்தார்கள். பிரமோற்ஸவம் நீங்கலாக நித்தியப் படித்தரம் ஆட்ட விசேடங்கள் சிறக்கும்படி நடத்தினார்கள்.

திருப்பத்தூர் சுவிடீஸ் கண் ஆஸ்பத்திரிக்கு நன்கொடை கொடுத்தார்கள். திருக்கோஷ்டியூர் ஸ்ரீ மாதவன் கோயிலுக்கு தங்க கிரீடம் செய்ய பெரும் தொகை கொடுத்தார்கள். தன் குல தெய்வமான சாத்தய்யனாருக்கு தங்கக் கிரீடம் செய்து வைத்தார்கள்.

ஸ்ரீ மதியாதகண்ட விநாயகர் அழகு சௌந்தரி அம்பாள் திருத்தேர்கள் நிற்க அடித்தளம் போட்டும் தேர் முட்டி கட்டியும் கொடுத்தார்கள். பட்டமங்கலம் ரத வீதிகளுக்கு சரளை பரப்பினார்கள்.

## ஐயா அவர்களின் அருங்குணங்கள்:

அய்யா அவர்கள் சிவதீட்சை பெற்ற மகா ஞானி ஆவார். அவர் உலக அறிவும், நூலறிவும் கொண்டவர். சிறந்த கொடைவள்ளல் இவரின் வலக்கை கொடுப்பது இடக்கைக்கு தெரியாதாம். அய்யா அவர்கள் தம்மிடம் பணிபுரிந்தவர்களை உள்ளன்புடன் நினைக்கும் பண்பாளர். தாமும் கொடுத்து தம் மறைவுக்கு பின் தம் மகனும் தம் பணியாளர்களுக்கு நல்லன செய்ய வேண்டும் என கேட்டுக் கொண்டவர்.

ஐயா அவர்கள் சிவ பூசை செய்யும் போது தலையை மேலும் கீழும் ஆட்டியபடியும் சிந்தனை செய்வது போலவும் நேருக்கு நேர் பேசுவது போலவும் இருக்கும் என ஐயா அவர்களின் அனுக்கத் தொண்டர்கள் கூறுவர்.

ஐயா அவர்கள் ஒரு முறை ஒரு பெரிய கல்யாண வீட்டிற்கு போகும்போத அவ்வீட்டில் செட்டிநாட்டு அரசரே ஐயா அவர்களின் காருக்குப் பக்கத்தில் வந்து ''அண்ணே நாங்க பலரும் செய்யுறதை நீங்க ஒருத்தரே செய்தவங்க சிவதர்மம் செய்தவங்க, வாங்க''———என்று அழைத்து தம் கையில் போட்டுக் கொண்டு வீட்டின் உள்ளே அழைத்துச் சென்றதாக அய்யா அவர்களிடம் பலகாலம் ஓட்டுனராக பணியாற்றிய தற்போத சிவகாசி சிவா சுவாமியாகிய வேலுத்தேவர் அவர்கள் சொல்லுவார்கள்.

## ஐயா அவர்களின் கொடைத்தன்மை:

ஐயா அவர்கள் சிறந்த ஈகையாளர். வரையாது வழங்கினார். அஞ்சா நெஞ்சுடையவர். மனம் சளைக்காதவர். தம் வாணிபத் தொழிலில் பலமுறை வியாபாரச் சரிவுகளும் தீ போன்ற உட்பாதங்களும் ஏற்பட்டு அவ்வப்போது வியாபாரத்தில் மேடு பள்ளங்கள் ஏற்பட்டபோதிலும் தளராத நெஞ்சினர்.

ஐயா அவர்களைப் போற்றிப் பரவிய ஒரு வித்வத் தன்மையுள்ள மாது

கொடையில் இவரைப் போல் கொடுத்தவர் யாருமில்லை
சடைதனில் கங்கை தரித்த சிவனைக் கண்டு'' —
என்றாராம்

எவ்வளவு பொருத்தமான வார்த்தை.

ஐயா அவர்கள் தம் வாழ்நாளில் ராமநாதபுரம் கைவல்யம் ராமாநந்த சரஸ்வதி என்ற சாது வித்வானையும் குற்றாலம் சாமியார் என்ற வைத்தியரையும் சிறந்த முறையில் ஆதரித்தார். ஐயா அவர்கள் ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடம் சங்கராச்சாரிய சுவாமிகளிடம் அபாரமான நேயம் கொண்டவராம். ஆச்சாரிய சுவாமிகளும் ஸ்ரீ அட்டமாசித்தி தலத்தில் பல முறை மாதக்கணக்காக முகாமிட்டு செல்வார்களாம்.

ஐயா அவர்கள் ஒவ்வொரு வெள்ளிக்கிழமை தோரும் சாதுக்களும் தர்மம் செய்வார்களாம்.

## ஐயா அவர்களின் அமர வாழ்வு:

ஸ்ரீ அடைக்கப்ப ஐயா அவர்கள் தோன்றிற் புகழோடு தோன்றுக என்னும் படிக்கு திருவவதாரம் செய்து பாரி, பாரி, என பலரும் புகழ வாழ்ந்து தமது 85ம் வயதில் இறைவன் திருவடி அடையும் காலம் நெருங்கும் போது கோவிலூர் திருமடத்து அதிபர்களால் ஆபத் சந்நியாசம் பெற்று ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் என்ற திருநாமம் பூண்டு கி.பி.1944 தாரண ஆண்டு புரட்டாசி மாதம் 20ம் தேதி வியாழக் கிழமை கார்த்திகை நன்னாளில் நித்தியானந்தப் பெருவாழ்வான பரிபூரண மகாசமாதியடைந்தார்கள்.

சுவாமி அவர்களின் சமாதிக் கோயில் கல்திருப்பணியால் கட்டப்பெற்று ஆண்டு தோறும் புரட்டாசி கார்த்திகை நன்னாளில் குருபூசை சிறப்பாக நடைபெற்றும் அவர்தம் சமாதி ஜீவலிங்கத்திற்கு நாள்தோறும் காலை மாலையில் நித்திய பூசைகளும் சிறப்புடன் நடைபெற்று வருகின்றன.

★★★

# சிவநெறிச் செல்வர்

# பட்டமங்கலம் அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் வரலாறு

## பிறப்பும் கல்வியும்:

தெய்வீக வரலாறு கொண்ட பட்டமங்கலம் திருநகரில்



ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் சமாதி

திருப்பணிச் செல்வர் அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்களுக்கும், திருமதி நாச்சம்மை ஆச்சி அவர்களுக்கும் தவப்பயனால் மூன்று பெண் மக்களும் கி.பி.1900ம் ஆண்டில் ஒரு ஆண் மகனும் பெற்றார்கள்.

இந்த ஆண் மகனே அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள். இவரை காசிச் செட்டியார் என்றும் அன்புடன் அழைப்பார்கள். இவர் தக்க வயதில் மதுரையிலும், கொழும்பிலும் கல்வி பயின்றவர். தமிழும் ஆங்கிலமும் செம்மையுறக் கற்றுத் தேர்ந்தவர். கல்வி கற்றபின் கொழும்பு போய் தம் தந்தையார் அவர்களின் பெரும் வியாபார ஸ்தாபனத்தில் வாணிப நுணுக்கங்கள் பயின்றார்கள். கொழும்பில் அமைந்த அப்பெரும் வியாபார ஸ்தாபனம் பன்நாட்டுப் பொருட்களும் ஏற்றுமதி இறக்குமதி லைசென்ஸ் பெற்ற ஸ்தாபனமாகையால் பன்நாட்டு வியாபார நிறுவனங்களுடன் செட்டியார் அவர்கள் தொடர்பு கொண்டவர்கள்.

தம் வியாபார ஸ்தாபனத்தின் ஏஜெண்டுகளுடன் செட்டியார் அவர்கள் ஜெர்மனி நாட்டுக்கு வியாபாரப் பயணம் செய்து வெற்றிகரமாக திரும்பினார்கள்.

## இல்வாழ்க்கை:

அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் சிறந்த தோற்றப் பொலிவும், புன்னகை தவழும் முகமும், அன்பும் அருளும் கூடிய உள்ளமும், ஊக்கமும், பிறரைத் தன்வசமாக்கும் பேச்சுத் திறனும் கடவுள் பக்தியும், தத்துவ சிந்தனைகளும் உடையவர்.

அவர் கல்லலில் செல்வக் குடும்பத்தில் நா.வயி அவர்கள் புரத்தில் உறவில் உள்ள மனைத்தக்க மாண்பு படைத்த நங்கையாகிய நாச்சம்மை ஆச்சி அவர்களை திருமணம் புரிந்து இல்வாழ்க்கை நடத்தினார்.

பெரும்பாலும் கொழும்பிலும், சிறுபான்மை பட்டமங்கலத்திலும் வாழ்ந்து வந்தார்கள். செட்டியார் அவர்களுக்கும் திருமதி நாச்சம்மை ஆச்சி அவர்களுக்கும் மூன்று பெண் குழந்தைகளும், இரண்டு ஆண் குழந்தைகளும் பிறந்தனர். இரண்டு பெண் குழந்தைகளுக்கு பின் ஒரு ஆண் குழந்தையும், பின்பு ஒரு பெண் குழந்தைக்கு பின் ஒரு ஆண் குழந்தையையும்

பெற்றார்கள்.

இந்த இரண்டு ஆண் மக்களுள், மூத்தவரான தொழில் அதிபர் அ.வீர. இராமநாதன் செட்டியார் அவர்கள் கொழும்பில் வியாபாரத்துறையில் புகழ் பெற்று விளங்கினார்கள்.

இளையவரான திரு அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்கள் இந்தியாநாட்டில் சென்னை, பாம்பே, பெங்களூர், கல்கத்தா போன்ற பெருநகர்களில் பெரும் தொழில் ஸ்தாபனங்கள் அமைத்து பெரும் தொழில் அதிபராகவும் தர்மநெறி காக்கும் தன்மையாளராக விளங்கி வருகின்றார்கள்.

## அ.வீர.அ. வீரப்பசெட்டியார் அவர்களின் அறப்பணிகள்:

''தந்தைக்கு ஏற்ற தனையனாய்'' தம் தந்தையாரின் அறப்பணிகள் எல்லாம் குறைவின்றி நடக்கவும் அவைகள் மென்மேலும் வளர்ச்சியடையவும் பாடுபட்டார்கள்.

கி.பி. 1944ம் ஆண்டு தம் தந்தையாரான ஸ்ரீமத் அடைக்கப்ப சுவாமிகள் மகா சமாதியாகி அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் கற்றளியால் அழகிய சமாதி ஆலயம் அமைத்து நாள் தோறும் அதற்கு பூசைகள் நடக்கவும் ஆண்டு தோறும் புரட்டாசிக் கார்த்திகை நன்னாளில் குரு பூசையும் சிறப்புடன் நடைபெறச் செய்தார்கள்.

அத்துடன் சமாது ஆலயத்தின் கிழக்கே பசு மடமும் அமைத்தார்கள்.

திருக்கோயிலின் பரம்பரை அறங்காவலராக இருந்து திருக்கோயிலுக்கு பலமுறை சுவாமி பரிவார தேவதைகளுக்கு அஷ்டபந்தன மருந்து சாத்தி மகாபிஷேகம் செய்தார்கள். பொற்றாமரைக் குளத்து மண்டபத்தில் காங்ரீட் வகையறாப் போட்டு சீர்திருத்தினார்கள்.

கி.பி. 1944ம் ஆண்டு மே மாத 29ம் தேதி பூங்குடி மிளகாய்ச் சுவாமிகளின் சிஷ்யையும் ஸ்ரீ மத் அடைக்கப்ப சுவாமிகளால் ஆதரிக்கப்பட்டவருமான சாது ஆனந்த அம்மையாரின் ஆபத் உயில் சாசனப்படி அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்க

ளின் துணைவியார் நாச்சம்மை அவர்கள் ஆனந்தம்மையார் மடத்தின் நிர்வாகத்தை கண்காணித்து வந்தார்கள். சாது ஆனந்த அம்மையார் மகா சமாதியடைந்த பின் நம் செட்டியார் அவர்கள் கற்றளியால் அழகிய சமாதிக் கோயில் அமைத்து நாள்தோறும் நித்தியப் பூசைகள் நடைபெறச் செய்தார்கள்.

தம் தந்தையாரால் தனி மனிதராக செய்த ஸ்ரீ அட்டமாசித்தி, ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர் ஆலய பூசைகள், விழாக்கள் குறைவின்றி நடைபெறவும், நிர்வகிக்கவும், பராமரிக்கவும் செட்டியார் அவர்கள் திருவுள்ளம் கொண்டார்கள்.

ஸ்ரீ அட்டமாசித்தி ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வர் ஆலய நிர்வாகத்துக்கு தம் தந்தையார் எழுதி வைத்த நிலங்களைத் தவிரவும் தனியாக தம் தந்தையார் பெயரிலும் தம் வாரிசுதாரர்கள் விலாசத்திலும் தனி டிரஸ்ட் அமைத்து ''அ.வீர.அ. குடும்ப தர்ம டிரஸ்ட்'' என்று பெயரிட்டு 1947ம் ஆண்டு ஜனவரி மாதம் 27ம் தேதி 232ம் எண்ணாக ரிஜிஸ்தர் பதிவு செய்து வைத்தார்கள். 27.10.1947ல் பட்டமங்கலத்தில் ரைஸ்மில் ஒன்று ஏற்படுத்தி டிரஸ்டுக்கு சொந்தமாக்கிவிட்டார்கள்.

திருக்கோயிலுக்கு தம் தந்தையார் எழுதிவைத்த காட்டாம்பூர் நிலங்களுக்குப் பதிலாக, தம் தந்தையாரால் 1915ம் ஆண்டு ஆகஸ்ட் 30ம் தேததி பன்னைதிருத்தி சி.மா. நாச்சியப்பன் அம்பலம் பெரியசாமி அம்பலம் வகையறாவிடம் நம்பர் 1347/ஆகஸ்ட் 1915ல் பதிவுக் கிரையம் பெற்று ரூ 13000/= செலவு செய்து சீர்திருத்தம் செய்யப்பட்டதும் வளமானதுமான உதிரப்பட்டி நஞ்சை ஏக்கர் 29.11, ஐ சென்னை இந்துசமய அறநிலைய ஆட்சித்துறைச் சட்டம் 1959 (சென்னை ஆக்ட் 1959) செக்ஸன் 34ன் படி இந்துசமய அறநிலைய ஆட்சித் துறை (சென்னை) கமிசனர் திரு. A. உத்தண்டராமன் பிள்ளை ஐ.ஏ. எஸ் அவர்களின் ஆர்டர் நி 104/1960 மூலம் கோயிலுக்கு கொடுத்து பரிவர்த்தனை செய்து கொண்டார்கள்.

அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் பட்டமங்கலம் பெ.மு. செல்லையாத் தொண்டமான், பெ.மு. சுப்பையாத் தொண்டமான் இருவர்களிடமும் 1958ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 12ம் தேதி நம்பர் 907 பதிவுக் கிரையம் மூலம் இடம் வாங்கி பட்டமங்கலம் நாட்டுக் கோயிலான ஸ்ரீ முனியய்யா கோயிலுக்

காக ஸ்ரீ முனியய்யா கோயில் பக்கத்தில் காம்பௌன்ட் கட்டிக் கொடுத்தார்கள். அக் காம்பௌன்ட் இடத்தில் கிடைக்கும் வருவாயை ஸ்ரீ முனியய்யா கோயிலுக்கு கிடைக்கும்படி செய்தார்கள்.

நம் செட்டியார் அவர்கள் பட்டமங்கலம் உயர் தொடக்கப்பள்ளிக்கு இடம் விட்டுக் கொடுத்தார்கள். தம் கண்காணிப்பில் பெரிய கட்டிடமும் கட்டிக் கொடுத்தார்கள். சொக்கனாதபுரம் மணிமுத்தாற்று பாலம் கட்ட பெரும் பொருள் உதவி செய்தார்கள்.

1961ம் ஆண்டில் ஸ்ரீ அட்டமாசித்தி தெட்சிணாமூர்த்தி ஆலயத்தில் ஒவ்வொரு வியாழக்கிழமையிலும் கூட்டுப் பிரார்த்தனை செய்ய ''வார வழிபாட்டுக் கழகம்'' ஏற்படுத்தினார்கள். இதன் மூலம் இளம் வயதிலேயே குழந்தைகளுக்கு சமய உணர்வு ஏற்பட வழிசெய்து அதற்கு ஆண்டு தோரும் விழா எடுத்து குழந்தைகளுக்கு பரிசு வழங்கி பரிசு வழங்கி ஊக்குவித்தார்கள்.

## பொதுப்பணியில் நிற்றல்:

சிவநெறி வளர்ச்சியிலும், அறப்பணிகளின் ஆக்க வளர்ச்சியிலும் ஊக்கம் காட்டியது போலவே பொதுப் பணிகளிலும் ஈடுபட்டார்கள். பட்டமங்கலம் (மேற்கு) ஊராட்சி மன்றத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் ஊரின் வளர்ச்சிக்குப் பெரும் பாடுப்பட்டார்கள். அய்யா அவர்கள் ஊரின் மருத்துவமனைக்கு இடம் விட்டுக் கொடுத்தார்கள்.

## உள்நாட்டில் வாணிப நிறுவனங்கள் அமைத்தல்:

அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் தம் தந்தையார் கொழும்பில் தொடங்கிய பெரும் வியாபார ஸ்தாபனம் மட்டுமல்லாது இந்திய நாட்டிலும் புதுத் தொழில் தொடங்க எண்ணினார்கள். அதன்படி பாம்பே, சென்னை, கல்கத்தா நகரங்களில் வாணிப அலுவலகங்கள் உள்ள

''ரெமி பெர்பியூமஸ் பிரைவேட் லிமிடெட்'' நிறுவனத்தையும் A.V.R.A & Co. தொடங்கி பட்டமங்கலத்தைச் சார்ந்த

படித்த இளைஞர்கள் பலருக்கும் வேலை வாய்ப்புகள் நல்கி வளம்பெறச் செய்தார்கள்.

## குணநலன்கள்:

நம் செட்டியார் அவர்கள் பைந்தமிழும் ஆங்கிலமும் பயின்று மிக்க நூலறிவு கொண்டவர். சைவ சமய நல்லொழுக்கத்தில் நின்றவர். ஆடம்பரம் இல்லாதவர் அடக்கத்திற்கும் உண்மை அன்புக்கும் பெயர் பெற்றவர். சிவநெறிச் செல்வர்களையும் நல் அறிஞர்களையும் போற்றி ஆதரிப்பவர். தத்துவ ஆராய்ச்சியும், இசை இன்பத்திலும் ஈடுபாடு உடையவர்.

நம் செட்டியார் அவர்கள் திருவாசகத்திற்கு உரை கண்ட உத்தரகோச மங்கை அபிஷேக பாண்டியன் பிள்ளை அவர்களையும், பெரும் கவிஞர் தஞ்சை கரந்தை வெள்ளைவாரணம் கலியாணசுந்தம்பிள்ளை அவர்களையும் அன்புடன் ஆதரித்து வந்தார்கள்.

கோவிலூார் மடத்தை சார்ந்த குழந்தைவேல் சுவாமி அவர்களிடத்தும் ஸ்ரீஸ்ரீ திருச்சி சுவாமிகளிடத்திலும் அளவற்ற ஈடுபாடு கொண்டவர். 1958ம் ஆண்டு சிருங்கேரி ஜெகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமி அவர்களையும் 1963 ம் ஆண்டு நடமாடும் தெய்வம் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளையும் பட்டமங்கலத்திற்கு அழைத்து வந்து பெரும் சிறப்புச் செய்தார்கள்.

## இனிய வாழ்வில் இறுதிக் காலம்:

1960ம் ஆண்டில் மணிவிழாவின்போது திடீரென நோய் வாய்ப்பட்ட அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் ''தருமம் தலைகாக்கும்'' என்ற நெறியில் குணம் பெற்று அனேக அறப்பணியும் சமுதாயப் பணிகளும் செய்த அண்ணல் 1969ம் ஆண்டு சூன் மாதம் 2ம் நாள் இறைவன் திருவடிகளில் இரண்டறக்கலர்தார்கள்.



## சிவநெறிச் செல்வர் அ.வீர.அ. வீரப்ப செட்டியார் அவர்கள் வாரிசுதாரர்களின் குடும்ப வாழ்கையும் வளமையும்.

சிவநெறிச் செல்வர் அ.வீர.அ. வீரப்ப செட்டியார் நாச்சம்மை ஆச்சி தம்பதிகளுக்கு மூன்று பெண் மக்களும் இரண்டு ஆண் மக்களும் பிறந்தார்கள். பெண் மக்கள் மூவரும் ஆண் மக்கள் இருவரும் தக்க உறவு முறையில் சிறந்த குடும்பங்களில் மணமுடித்தார்கள் சீரும் சிறப்புடன் திகழ்கின்றனர்.

இக்குடும்பத்தவர்கள் செல்வச் செழிப்பும், புகழும் இறைவன் திருவருளும் பெற்று வையத்துள் வாழ்வாங்கு வாழ் கின்றனர்.

## தற்கால அறங்காவலரின் வாழ்வும் பணியும்

தனிப்பெரும் திருப்பணிச் செல்வரான ஸ்ரீ மத அடைக்கப்ப சுவாமிகள் அவர்களின் பேரர்களான தொழில் அதிபர் திரு.அ.வீர.ராமநாதன்செட்டியார் அவர்களும் தொழில் அதிபர் திரு. அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்களும், தம் தந்தையார் சிவநெறிச் செல்வர் அ.வீர.அ. வீரப்பசெட்டியார் அவர்களுக்கும் பின் திருக்கோயிலுக்கு பரம்பரை அறங்காவலர்களாகப் பொறுப்பேற்றார்கள்.

திருக்கோயிலைச் சார்ந்த சர்வே 137, சர்வே 138/4 A,B, நம்பர் உள்ள ஏக்கர் 1.80; ஏக்கர் 9.34 விஸ்தீர்ணமுள்ள தெப்பக் குளம், கோயில் பொற்றாமறை உள்ளிட்ட திருக்கோயில் இடங்களுக்கு தமிழ்நாடு ஜமீன் ஒழிப்புச் சட்டம் 1948 திருப்பதூர் வட்டம் பட்டமங்கலம் கிழக்கு அவுட்சைடு கோப்பு பட்டாக்களை சப்கலெக்டர் ஆர்டர் அ.5 24176/69 18.7.70ம் தேதி உத்தரவுப்படி பெற்றார்கள்.

1970ம் ஆண்டில் அ.வீர.அ. தர்ம டிரஸ்டின் வருமானத்திற்காக வடக்கு வீதிக் கட்டிடங்கள், மேலரத உள்வீதிக் கட்டிடம், இவைகளை வழங்கினார்கள்.

திருக்கோயிலுக்கு வேண்டிய எரி துரும்புகளுக்கு வேண்டிய மரங்கள் வளர்ப்பதற்காக கொங்கராம்பட்டி கிராமத்தில் பெரிச்சிக் கோயில் குரூப் சர்வே 40ல் விஸ்தீர்னம் ஏக் 11.86 திருக்கோயிலுக்கு வழங்கினார்கள்.

தொழில் அதிபர் திரு. அ.வீர. ராமநாதன் செட்டியார் அவர்கள் 29.11.73உ மறைவுக்குப் பின் தொழில் அதிபர் திரு. அ.வீர. அடைக்கப் செட்டியார் அவர்களும் தொழில் அதிபர் திரு. அ.வீர.ராம. வீரப்ப செட்டியார் அவர்களும் திருக்கோயி லின் பரம்பரை அறங்காவலர்களாக திறம்பட நிர்வகித்து வருகிறார்கள். அறப்பணிகளும் சமுதாயப் பணிகளும் சிறப்புடன் செய்துவருகிறார்கள்.

கொழும்பில் தொழில் அதிபர் திரு அ.வீர.ராம. வீரப்ப செட்டியார் அவர்கள் கொழும்பு ஸ்ரீ கதிரேசன் கோயிலுக்கு தற்போது அறங்காவலர்களில் ஒருவராக இருக்கிறார்கள்

1987 பிப்ரவரி மாதம் ஸ்ரீ அட்டமாசித்தி வேத ஆகமப் பாடசாலை தொழில் அதிபர் திரு அ.வீர. அடைக்கப்ப செட்டி யார் அவர்களால் தம் சொந்தச் செலவில் தொடங்கப் பெற்று சிறந்த முறையில் நடைபெறுகிறது.

தொழில் அதிபர் அ.வீர. அடைக்கப்ப செட்டியார் அவர்கள் சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானத்தைச் சேர்ந்த பட்டமங்கலம் ஸ்ரீ மதியாத கண்ட விநாயகர் அழகு சௌந்தரி அம்பாள் திருக்கோயில்களுக்கு கௌரவக் கண்காணிப்பாள ராக இருந்து வருகிறார்கள்.

இவர்தம் துணைவியார் அ. பிச்சம்மை ஆச்சி அவர்கள் ஸ்ரீ சாது ஆனந்த அம்மையார் அவர்களின் உயில்ப்படியும் அ.வீர. நாச்சம்மை ஆச்சி அவர்களின் உயில்ப்படியும் ஸ்ரீ சாது ஆணந்த அம்மையார் மடத்துக்கு டிரஸ்டியாக இருந்து வருகி றார்கள்.

இத்திருக்கோயிலின் அறங்காவலர்கள், இத்திருக்கோ யிலின் நிர்வாகத்துடன், ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயி லின் பூசைகள் ஒழுங்காக நடைபெறுவதற்காக அத்திருக்கோயி லின் பூசை முறையையும் நிர்வாகப் பாத்திய டிரஸ்டி உரிமை யையும் பெற்று அதனை ஸ்ரீ அட்டமாசித்தி ஸ்ரீ மீனாட்சி சுந்த ரேஸ்வரர் ஆலயத்துடன் இணைத்து ஆகம முறைப்படி சிவாச் சாரியார்களால் பூசையும், நிர்வாகமும் செய்து வருகிறார்கள்.



பட்டமங்கலம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் பெயரில் கும்பகோணம் வித்வான் உயர்திரு சுப. வெள்ளைவாரணம் பிள்ளை அவர்கள் குமாரர் தஞ்சை கரந்தை கலியாண சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய சித்திரப் பாக்கள்.

## இலிங்க பந்தனம் மாலைமாற்று

''தூவமர் செம்பொற் சோதி சொல்லுறுங் கரக பாலி
யோவருங் குன்றை வில்லி யொண்புகழ்க் காசொணாச் சூழ்
தேவரெந் தேவா வென்று தினமுங்கை கூப்புதேவு
மாவள மோங்கும் பட்ட மங்கைவாழ் சொக்க லிங்கம்''

## மலைப் பந்தனம்

''மாதுமையெப் போதுமன்னி வாழுறும்வா மத்தோயி
யாதவரைப் போற்றி யலையாதா —— ணாதனே
வாமாகை மானேந்தி மாசார்பா நீமேவு
சோமேசா கையிலையீ து.''

## பதும பந்தனம்

''ஈகனக யோகநக மாகனக வாகமக
வாகமயில் வாகனனை வாய்ந்துமையோர் —— பாகம் வைத்
துற்ற சொக்க லிங்கேசா ஓதுமிது நின் செய்ய
நற்றிருப் பாதமல ராம்''

## ரத பந்தனம்

''மூவருள்ளு மேன்மையர்வார் மொய்த்த சடையார்வார்
தேவர் புகழ் சர்வேசர் தேவேவுங் —— காவலவர்
சோராத தெமையளிக்கும் சோதிமெய்ய ருத்தமராஞ்
சீராருஞ் சோமேசர் தேர்''

### சதுர நாக பந்தனம்

''அஞ்சீர் ஞான
மிஞ்சா சானெஞ்
சஞ்சேர் நீயயி
னஞ்சா ராவே.''

## துதிப் பாடல்கள்

### சித்தி விநாயகர்

''உள்ளமெனுங் கூட்டத்தில் ஊக்கமெனும்
தறிநிறுவி உறுதி யாகத்
தள்ளரிய அன்பெனுந் தொடர் பூட்டி
இடைப் படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக
களித்துண்டு கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்
—— திருவிளையாடற் புராணம்.

மண்ணு லகத்தினிற் பிறவி மாசற
எண்ணிய பொருளெ லாம் எளிதில் முற்றுற
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

''மாவளரும் பொழில்வளம் சால் வழுதியர்தம்
திருநாட்டில் மதிசால் நல்லோம்
நாவளரும் புகழ்படைத்த உயர் பட்ட
மங்கலமா நகரின் கண்ணே
பூவளரும் அன்பரெலாம் போற்ற எழுந்
தருளிநிலம் பொருந்தச் செய்யும்
தேவளரும் பெருங்கருணைச் சித்திவிநா
யகன் திருத்தாள் சிரமேற் கொள்வாம்.
— தனிபாடல்

# சுந்தரேசப் பெருமான்

## ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம்

### முதலாம் திருமுறை

பெண்தான் பாக மாகப் பிறைச் சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக
கண்டான் பாதங் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை உலக முய்யவே

தாயும்நீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பால் அன்புசெய்வான் ஆதரிக்கின்ற துள்ளம்
ஆயமாய காயந்தன்னுள் ஐவர்நின்றொன் றலொட்டார்
மாயமேயென் றஞ்சுகின்றேன வலிவலம்மே யவனே.

### இரண்டாம் திருமுறை

பண்ணின் நல்லமொழி யார்பவ ளத்ததுவர் வாயினார்
எண்ணின் நல்லகுணத் தாரினை வேல்வென்ற கண்ணினார்
வண்ணம் பாடிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகர் தானும் ஐயாறுடை ஐயனே.

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமைப் பங்கன் திருஆல் வாயான் திருநீறே.

### மூன்றாம் திருமுறை

குற்றம்நீ குணங்கள்நீ கூடல்சூல வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்ற நூற் கருத்தும்நீ யருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென் முகம்மனே.

# ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

## நாலாம் திருமுறை

கைப்பொது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்த்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி ஐம்புலனும் அகத்தடக்கி
எப்போதும் இனியானை என்மனத்தே வைத்தேனே.

காயமே கோயிலாகக் கடிமனம் அடிமை யாக
வாய்மையே தூய்மையாக மனமணி லிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய ஆட்டிப்
பூசனை ஈச னார்க்குப் போற்றவிக் காட்டி. னோமே.

## ஐந்தாம் திருமுறை

நமச்சி வாயவே ஞானமுங் கல்வியும்
நமச்சி வாயவே நானறி விச்சையும்
நமச்சி வாயவே நாநவின் றேத்துமே
நமச்சி வாயவே நன்னெறி காட்டுமே.

## ஆறாம் திருமுறை

(திருத்தாண்டகம்)

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி யென்னும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

## ஏழாம் திருமுறை

நாயேன்பல நாளும் நினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன் பெற லாகாவருள் பெற்றேன்
வேயார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லும் அருட்
டுறையுள்
ஆயாஉனக் காளாயினி அல்லேன்எனல் ஆமே.

கண்ணாய் ஏழுலகுங் கருத் தாய அருத்தமுமாய்ப்
பண்ணார் இன்றமிழாய்ப் பர மாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில் சூழ் மழ பாடியுள் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லால் இனி யாரை நினைக்கேனே.

# ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிய திருவாசகம்

## எட்டாம் திருமறை

பூதங்கள் தோறும்நின் நாயெனின் அல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுதல் அல்லால்
கேட்டறி யோம்உனைக் கண்டறிவாரைச்
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக்கும் அரியா யெங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்தெம்மை ஆண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்ஒப்பில் என்னையும் ஆட்கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப் பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பி.

# திருமாளிகைத் தேவர் அருளிய திருவிசைப்பா

## ஒன்பதாம் திருமுறை

ஒளிவளர் விளக்கே உவப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரண்மணிக் குன்றே
சித்தத்துட் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துஉகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

# திருமந்திரம்

## பத்தாம் திருமுறை

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமெனக் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருந்தோரே

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி இல்லைநுஞ் சித்தத்து
நன்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே.

# திருவாலவாயுடையார் அருளிய திருமுகப்பாசுரம்

## திருமுறை - 11

''மதிமலி புரிசடை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிற
கன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.''

## காரைக்கால் அம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதி

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந் திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்பது இடர்.

## சேக்கிலார் பெரிய புராணம் திருமுறை 12

ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகிச்
சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்
போதியாய் நிற்குந் தில்லை பொதுநடம் போற்றி போற்றி.

என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட
மன்றுளார் அடியார் அவர் வான் புகழ்
நின்றதெங்கும் நிலவி உலகெலாம்.



ஸ்ரீ மீனாட்சியம்மை

## ஸ்ரீ மீனாட்சியம்மை

பங்கையற்கண் ணரியபரம் பரனுருவே
தனக்குரிய படிவ மாகி
இங்கையற்கண் அகனுலகம் எண்ணிறந்த
சராசரங்கள் ஈன்றும் தாழாக்
கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண்
டியன் மகள் போற் கோலங் கொண்ட
அங்கயற்கண் அம்மைஇரு பாதப்போது
எப்போதும் அகத்துள் வைப்பாம்
- திருவிளையாடற் புராணம்.

மணியே மணியின் ஒளியே ஒளிரும் மணிபுனைந்த
அணியே அணியும் அணிக்க ழகேஅணுகா தவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே அமரர்பெரு விருந்தே
பணியேன் ஒருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே.

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்ப துன்னை
என்றும் வணங்கு வதுன்மலர்ந் தாள்எழுதா மறையின்
ஒன்றும் அரும்பொருளே உமையே இமையத்
தன்றும் பிறந்தவளே அழியாமுத்தி ஆனந்தமே
- அபிராமிஅந்தாதி

## முருகக் கடவுள்

வீரவேல் தாரவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேல் திருக்கைவேல் வாரிக்
கொளித்த வேல் கொற்றவேல் சூர் மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. - நக்கீரர்.

புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி ஒழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையும் அடியனாக்கி இருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி
- கந்த புராணம்.

நாரணன் என்னுந்தேவு நான்முகத் தவறும் முக்கண்
பூரணன் தானுமாகி புவி படைத்து அளித்து மாற்றி

ஆரண முடிவும் தேரா அனாதையாய் உயிர்கட்க் கெல்லாம்
காரண ணாயமேலோன் கழலினைக் கருத்துள் வைப்பாம்

வேதநாயகனே போற்றி விண்ணவர் தலைவா போற்றி
மாதொரு பாகாபோற்றி மறுசமயம் கண்மாள
பேதகம் செய்வாய்போற்றி பிஞ்ஞகா போற்றியாம்செய்
பாதகம் அனைத்தும் தீர்க்கும் பராபரா போற்றிபோற்றி

சொல்லால்வருங் குற்றம் சிந்தனையால் வரும் தோடம் செய்த
பொல்லாத தீவினைப் பாவங்கள் புண்ணியநூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடும் தீங்குகள் ஆயவும் மற்று
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே.

கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின் ஐந்தெழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே.

## அட்டமாசித்தி தெட்சிணாமூர்த்தி கார்த்திகைப் பெண்கள்

அப்பன் அடி பணிந்து
அட்ட சித்துக்களை
அன்புடனே கேட்டு
அருள்பெற்ற மங்கையர்கள்
அறுவர் பதம் போற்றுவம் யாம் - *(செ.ரா)*

அட்டமாசித்தி அருமையுடன் தானடத்தி
பட்ட மங்கலம் மேவும் பண்ணவனே
இட்டமொடு என் பாவங்கள் அகற்றி
தேட்ட மெட்டும் தந்தருள்வீர் சிறப்பாய் - *(செ.ரா)*

## நடராசர்

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோக்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேந்துஞ் செல்வஞ் செல்வமே

- திரு ஞான சம்பந்தர்.



அட்டமாசித்தி ஆலயம்

## திருமால்

என்பு உருகி இவ வேல் நெடுங் கண்கள்
இமை பொருந்தா பல நாளும்,
துன்பக் கடல் புக்கு வைகுந்தன் என்பதோர்
தோணிபெறாது உழல்கின்றேன்
அன்பு உடையாரைப் பிரிவு உறுநோயது
நீயும் அறிதி குயிலே!
பொன் புரை மேனிக் கருடக்கொடி உடைப்
புண்ணியனை வரக் கூவாய்
— நாச்சியார் திருமொழி

## ஸ்ரீ தட்சிணாமூர்த்தி

அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாடோரும்
நின்றார ஏத்தும் நிறைகழலோன் புனைக் கொன்றைப்
பொன்தாது பாடிநாம் பூவல்லிக் கொய்யாமே - திருவாசகம்.

அட்டமா சித்தி அருளியே ஆட் கொண்ட
தட்சிணா மூர்த்திப் பெருமானே! - பட்சமுடன்
நற்கலையும் பல்வளனும் பாரினில் ஏற்றமிகப்
பெற்றுய்ய நல்வரம் தா - திரு. ந. வேங்கடராமனார்.

## இலட்சுமி

செங்கமலப் பொலந்தாதில் திகழ்ந் தொளிரும்
எழில் மேனித் திருவே வேலை
அங்கண் உலகு இருள்துறக்கும் அலர்கதிராய்
வெண்மதியாய் அமரர்க்கு ஊட்டும்
பொங்கழலாய் உலகளிக்கும் பூங்கொடியே
நெடுங்கானில் பொருப்பில் மண்ணில்
எங்குளைநீ அவண் அன்றோ மல்லல்வளஞ்
சிறந்தோங்கி இருப்பது அம்மா - காசிகாண்டம்.

## சரஸ்வதி

புத்தகம் செபவடம் புனித ஞானமா
முத்திரை குண்டிகை முழுதும் ஏந்தெழிற்
கைத்தலத்(து) அமிழ்தினைக் கலைமடந்தையை
முத்தமிழ்க் கிழத்தியை முடிவ ணங்குவாம் - திருக்காளத்திபுரா
ணம்.

## சண்டேசுவரர்

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த புனிதற்கு
அமைக்கும் பொருளன்றி
மின்னுங் கலன்ஆ டைகள் பிறவும் வேறு
தனக்கென்று அமையாமே
மன்னுந் தலைவன் பூசனையின் மல்கும்
பயனை அடியார்கள்
துன்னும் படிபூ சனைகொள்ளும் தூயோன்
அடித்தா மறைதொழுவாம் - திருவானைக்கா புராணம்.

## நால்வர்

பூழியர்கோன் வெப்பொழிந்த புகழியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வண்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருந் தாள் போற்றி - சேக்கிழார் புரா
ணம்.

## நவக்கிரகங்கள்

சூரியன் சோமன் செவ்வாய் சொற்புதன் வியாழன் வெள்ளி
காரியும்ராகு கேது கடவுளரென்பர் நாமந்
தாரயற சக்கரத்தைத் தரித்திரர் பூசித்தாலும்
பாரினிற் புத்திர ருண்டாம் பாக்கியம் நல்குந்தானே

## வயிரவர்

பரமனை மதித்திடா பங்கயாசனன்
ஒருதலை கிள்ளியே ஒளிந்த வானவர்
குருதியும் அகந்தையும் கொண்டு தண்டமுன்
புரிந்திடும் வடுகனைப் போற்றி செய்குவோம்.

## வேண்டுகோள்

குற்றம் புரிதல் எனக்கியல்பே
குணமாக் கொள்ளல் உனக்கியல்பே
சிற்றம் பலவா இனிச் சிறியேன்
செப்பும் முகமண் யாதுளது?
தென்றென்(று) அடியேன் சிந்தைதனைத்
தெளிவித்து அச்சம் துயர் தீர்த்தே
இற்றைப் பொழுதே அருட்சோதி
ஈக தருணம் இதுவாமே - திரு அருட்பா.

## வாழ்த்து

மாமேவும் மதியாத கண்டபொருள் மதமொ ழுகும் மாமுக
கடவுள் கருணை வாழி!
தேமேவும் நவயடிக் காளியழகு சௌந்தரி கரும்பீசர் மங்கலம்
திருவருள் என்றும் வாழி!
ஆமேவும் சொக்கேசர் மங்கை யற்குவ தேசமது செய்த
அட்டமாசித்தி வாழி!
பாமேவும் புகழ் பெருகும் பட்டமங்கை நாடு
பாருலகம் தன்னில் வாழ்கவே ! - தனிப்பாடல்

வையகம் நீடுக; மாமழை மன்னுக;
மெய் விரும்பிய அன்பர் விளங்க;
சைவ நன்னெறி தாந்தழைத்து ஓங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே - பெரியபுராணம்.

வான்முகில் வழாது பெய்க;
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க;

குறைவு இலாது உயிர்கள் வாழ்க;
நான்மறை அறங்கள் ஓங்க;
நற்றவம் வேள்வி மல்க;
மேன்மை கொள் சைவ நீதி
விளங்குக உலகம் எல்லாம் - கந்தபுராணம்.

# ஸ்ரீ அழகிய சௌந்தர வல்லி

சீருலாவுஞ் சிறப்புமிகு பட்டமங் கலம்வாழ் அம்பிகையைப்
பாருளோர் யாவரும் நாவாரப் போற்றவே நலமெலாம்
கார் போலப் பொழியும் அன்னைபுகழ் அருந்தமிழில் யான்பாட
ஏர் புகழ் விநாயனே! உன்னடியை நாடினேன் அருளாயோ.

1) அளகொளியே ! அழகின் அற்புத
ஓவியமே அன்புடன் பணிவோர்
உளமதில் குடிகொள்ளும் நாயகியே
ஊருளோர் குலங்காக்கும் குலவிளக்கே
வளமெலாம் வழங்கும் வாரிதியே
தெவிட்டா இன்பஞ்சேர் இன்னமுதே
பழகுதமிழ் போற்றிடும் எங்களுயிராம்
அழகிய சௌந்தர வல்லியே!

2) முன்னொரு சமயம் சங்கரன்
உன்னழகின் அலைகளைப் பாடினான்
இன்றுமுன் அழியாத அழகினைப்
பாடவே யான் ஆசையும் கொண்டேன்
உன்னரிய எழிலினைக் காணவும்
ஏழையேன் கண்கள் கூசாவோ
நின்னடியே தஞ்சமெனக் கொண்டேன்
அழகிய சௌந்தர வல்லியே!

3) பாதமலர் தொழுவோர் நோவெல்லாம்
நொடியினில் நீக்குவாய் மாதாவே!
ஆதவன் வருகையால் இருளெலாம்
போவது போல் பாதத்தூளி கண்டே
வேதனை யாவுமே விரைவினில்
மாயாவோ? நேசமுடன் பணிந்தவர்
பாதகமும் போக்கியே உயர்ந்தனரே
அழகிய சௌந்தர வல்லியே!

4) நாட்டுளோர் வாழ்வுயரக் காட்டினில்
கோயில் கொள்ளும் கோமளமே
வாட்டமெல்லாம் போக்கவே கழனியெலாம்
செழிக்கச் செய்வாய் கற்பகமே.



ஸ்ரீ அழகு சௌந்தரி அம்பாள்

கூட்டமாய் வாழ்ந்துயர வளனறும்
சோலையும் கொண்டிலகும் செல்வியே
ஊட்டமெலாம் உவந்து நீ அளிப்பாயே
அழகிய சௌந்தர வல்லியே!

5) கோயிலுள் காணவே கூடி வந்தோம்
கம்பீரத் தோற்றமும் கண்டோம்
தாயுனைக் காண்பவர் தீயவரோ
என்றால் தொலைந்தே போவார்
சேயென அணைவோர் உன்னருளில்
மூழ்கியே இன்பம் பெறுவர்
தூயவனாய் என்னையும் காத்தருள்வாய்
அழகிய சௌந்தர வல்லியே!

6) சிங்கா சனத்தில் எழுந்தருளி
அங்கையில் சூலமும் தாங்கி
இங்குளோர் அகங்காரம், அறியாதோர்
செய்பாவம் தீவினை யாவையும்
திங்களும் கதிரும் போல் விளங்கிடும்
அங்கண் இரண்டால் சுட்டெரிப்பாய்
எங்களையும் கடைக் கண்ணால் காத்திருப்பாய்
அழகிய சௌந்தர வல்லியே!

7) பங்குனியில் பத்து நாளும் பாங்குடனே
திருவிழாக் கண்டுவரும் நாயகியே
உங்களுடைச் சகோதரியர் உமையவள்

கொப்புடை நங்கை மாணிக்க
மங்கையும் துர்க்கை சாமளை
கோமளையும் கண்டு களிப்பர்
தங்கத்தேர் ஊர்ந்தே காத்தருள்வாய்
அழகிய சௌந்தர வல்லியே!

8) சேம மங்கலையே! செகத்தின்
மூலமே இன்னருட் கடலே

பூமகள் நாமகள் போற்றிடும்
ஆதிசக்தியே! அம்பிகையே! அருட்சோதி
நாமங்கள் பலபூண்டோய் ! உன் புகழ்

முழுமையாய்ப் பாடுதல் யார்க் கெளிதே
காமங்கள் மாற்றியே காத்தருள்வாய்
அழகிய சௌந்தர வல்லியே!

9) தேடியே வணங்கி நின்றேன்
வேண்டும் அனைத்தும் நீயறிவாய்

நீடிய செல்வம் வேண்டும்
கேடிலாக் கல்வி வேண்டும்
கூடிய நண்பர் வேண்டும்
அன்பான இல்லறம் வேண்டும்
நாடிய நல் வாழ்வு வேண்டும்
அழகிய சௌந்தர வல்லியே!

10) வேண்டிய எல்லாம் அருள்வாய்
எளியவர்க்கு ஈந்திடச் செல்வமும்

வேண்டினேன் திருவடி மாறாத
பக்தியும் நிலையாக வேண்டினேன்
வேண்டுவோர்க்கு வேண்டுவன வழங்கவே
அருள்பொழி வண்மைசேர் கரமும்
பூண்டிலங்கும் வற்றாத பாக்கியமே
அழகிய சௌந்தர வல்லியே!

அழகிய சௌந்தர வல்லியின் அருளால்
உளமகிழப் பணிவார் உன்பெருமை பாடுவார்
நலங்கள் யாவுமே நானிலத்தில் பெற்றுய்வர்
குலமுடன் தழைத்தே குவலயத்தில் உயர்வரே!.

-- புலவர் திரு. ந. வேங்கட்ராமன்.

# ஸ்ரீ அழகு சௌந்தரி அம்பாள் - பாடல்

தயை புரிவாய் அம்மா - தயாநிதியே
தக்க தருணமிது மக்களைக் காத்தருள
தயை புரிவாய் அம்மா - தயாநிதியே ।

தஞ்சமென் றுனைநாடி
வந்தனை செய்திடும் மாந்தர்
சங்கட மெல்லாம் அகல
-(தயை புரிவாய் அம்மா)

பட்ட மங்கையில் வாழும் பராசக்தியே
பாரளந்த திருமாயனின் சோதரியே
பரம குணாநிதியே பரமனின் ஸதியே
- (தயை புரிவாய் அம்மா)

கந்தனை வளர்த்த காரிகையற் கருளிய கற்பகமே
கங்காதரன் வாக்கால் காளியான சிலையை
(காளையை) காவல் கொண்ட காமாட்சியே
- (தயை புரிவாய் அம்மா)

நாடு நகருடைய நாச்சியாரே
நன்மக்கள் பேருடைய நாயகியே
நற்தேர் விழாவுடைய நவசக்தியே.
- (தயை புரிவாய் அம்மா)

வடக்குவாசல் கொண்ட வடிவழகியே
வந்தவினை தீர்த்தருளும் வராகினியே
வரமெல்லாம் தந்தருளும் வரப் பிரசாதினியே
- (தயை புரிவாய் அம்மா)

ஆதியும் அந்தமும் இலா உமையே
அகில மெல்லாம் படைத்தருளும் அன்னை பராபரையே
அன்பர்க் கருள் புரியும் அழகு சௌந்தரியே
- (தயை புரிவாய் அம்மா)

நாவல் மரத்தடியில் நாயகியாய் வீற்றிருக்கும்
நாட்டுக் கதிபதியே நவகாளி தாயே
நாடு நலம் பெற நல்வாழ்வு தந்திட
- (தயை புரிவாய் அம்மா)

சுந்தரி சௌந்தரி நிரந்தரியே
சுந்தரர் பாகத்தில் அமர்ந்தவளே
சுகமெல்லாம் தந்து அருள்பவளே
- (தயை புரிவாய் அம்மா)

அநீதிபல செய்த அசுரர் குலம் வென்ற அருட்சக்தியே !
அமரர் இடர் தீர்த்த ஆதி சக்தியே !
அடியவரைக் காத்தருளும் அம்பிகையே
- (தயை புரிவாய் அம்மா)

சுமங்கலி போல் என்முன் வந்தவள் - அன்றே
சுகம் தந்து என் உயிர் காத்தவளே !
சுந்தரியே! என் வம்சம் எந்நாளும் காத்தருள
- (தயை புரிவாய் அம்மா)

-செ. ராஜாமணிபிள்ளை.

